# முகவுரை

இவ்வுரை நூல், தமிழகத்தின்கண் பண்டைக்காலத்து நிகழ்ந்த ஒரு உண்மை வரலாற்றினைச், சிற்சில கிளைக்கதைகளும், நீதியும், பழைய வழக்க ஒழுக்கங்களும், பிறவும் இடையிடையே விரவிவரப், பெரும்பான்மையும் பிறசொற் கலவாமல், தன்பால் வந்துள்ள சிறந்ததொரு சொற்றொடரே பெயராக அமையக், கதைபோக்கைத் தழுவி எழுதிக் காட்டுமாறு எம்மை வேண்டிய கல்லூரியிற் பயிலும் மாணவர் சிலர் பொருட்டு, எழுதப்பெற்றது.

இது தமிழரின் தொன்மை நிலைமையே யன்றித் தமிழ் உரை நடை எழுதுமாற்றை அறிய விழைவுறும் மாணவர்க்கும் இன்றியமையாதது.

*　　*　　*　　*

எல். உலகநாத பிள்ளை.

## இந்நூலாசிரியரது - - -
## - - - மற்றைய நூல்கள்

1. சோழன் கரிகாலன்
2. கபிலர்
3. சாவித்திரி



௨

# கன்றுங் கனியுதவும்

புரிசைப் புறத்தினிற் சேரனுஞ் சோழனும் போர்புரிய
வீரியச் சயங்கொண்ட போழ்தினில் யாமினி யீங்கிவனைப்
பரிசுக்கு நல்ல கவிபாடி னல்வரும் பாக்யமென்றே
வரிசைத் தமிழ்புனை பாரியும் பாண்டியன் மண்டலமே.

தமிழ்மணங் கமழும் யாறும், தாமரை மலரும் பொய்கையும், கழுநீர் மணக்கும் ஓடையும், கயல் விளையாடும் ஏரியும் செறிதர, நீர்வள மிக்கு விதைத்த ஒன்று ஆயிரமாக விளைதலால், குடிகள், பசியும் பிணியும் பகையுமின்றிக், கல்வியும் செல்வமும் மிக்குடையராய் இன்புற்று வாழுதற் கிடமாய்ச் சிறந்து விளங்கும் பாண்டிவள நாட்டில், உலகமுழுதும் வரினும் வழங்கக் குறைபடா வளப்பம் வாய்ந்த பறம்பு நாட்டில், முடியுடை வேந்தர்க்கு மகட்கொடுத்தற்கு உரியராகிய உழுவித்துண்ணும் வேளாளர் மரபில் வேள்பாரி என்றொரு வள்ளல் இருந்தான்.

இவன், பகைவர் அஞ்சும் தோள்வன்மையும், வில்வாட் பயிற்சியும் மிக்குடையோன்; மணமுற்ற பொன்மலர் போலக் கல்வியிற் சிறந்த கட்டழகன்; புலவர் பெருமானாகிய கபிலரை

உயிர்த்துணையாகக்கொண்டொழுகும் உரவோன், இரப்போர்க்கீதலும், அதனாற் புகழ்பட வாழ்தலும் ஊதியமாகக் கொண்டவன்; அந்நாளையிற் கொடையின் மேம்பட்டவர் பலர் இருக்கவும், 'கொடுக்கி லாதானைப் பாரியே யென்று கூறினுங்கொடுப்பாரிலை' என ஆளுடை நம்பியால் கொடைக்கு எல்லையாகத் திருநெறித்தமிழில் எடுத்தாளும் பேறு பெற்றவன் இவன் என்றால், இவனது கொடைத் திறனைப் புகழ்ந்து கூற யாரால் முடியும்?

இவ் வள்ளலுக்குரிய பறம்பு நாட்டில், வான் போல் அகன்று அதன்கண் விளங்கும் மீன்போலச் சின்னஞ் சிறிய பன்னரும் சுனைகள் நிறைந்த பறம்புமலை நிற்கும். இம்மலை, உலகின் கண்ணுள்ள ஏனைய மலைகளைப் போல்வதன்று; இதில், பார்க்கும் இடமெங்கும் மூங்கில் நெல் தானே விளைந்து தலைசாய்ந்து கிடக்கும்; பலாமரங்கள் பழுத்து இனிய சுளைகள் புறந்தோன்ற வெடித்து நறுமணங் கமழா நிற்கும்; கொழுவிய வள்ளிக்கிழங்கு தாழ அகப்படும்; கொம்புகளில் தூங்கிக்கொண்டிருக்கும் தேனடைகள் தேனைச்சொரியும்; இவையன்றி என்றும் வற்றாத அருவிகள் பல இருத்தலால், மரங்களும் கொடிகளும் காலமல்லாத காலத்தும் பூத்துக் காய்த்துக் கனியுதவும்; விண்ணின்று வழுக்கிய மீன் போல மணியும் பொன்னும் இடந்தொறும் ஒளிவீசும்.

இவ்வண்ணம் பொன்னாலும் மணியாலும் பொலிவு பெற்றுப் பார்மகட்கு மணிமுடி போல் விளங்கும் இம்மலையின் மேல், நூல் வரம்பு தவறாமல் அமைக்கப் பெற்ற ஓர் அரணுளது. அது, உள்ளிருப்பவர் வருத்தமின்றி வாழுதற்கேற்ற பேரிடத்ததெனினும், கோட்டை வாயிலும், கோட்டையினுட் புகும் வழியும் ஒழிந்த இடங்களில் மலை காடு நீர் நிலை

என்ற இவற்றுள் தகுதியானவை இருத்தலால் காக்கவேண்டு, மிடம் சிலவே அமைந்தது. இவ்வரண் மலைமேல் அரணாத லால், ஏணிக்கெட்டாத உயர்ச்சியும், புறத்தோரால் தோண் டக்கூடாத அடியகலமும் உடையது. அன்றியும், பகைவர் விடும் படைக்கலங்கள் தம்மேற் படாமல் உள்ளிருப்பவர் நின்று போர்செய்தற் கமைந்த தலையகலமும், பகைஞரால் படைக்கலத்தால் அழிக்க ஒண்ணாத திண்மையும் வாய்ந்தது. இன்னும், வளைந்து தானே அம்புகளை எய்யும் எந்திர வில் லும், கற்களை வைத்து வீசி யெறியும் கவணும், மதிலைப் பற்றுவோரை மீன்போலக் கோத்து வலிக்குந் தூண்டிலும், பற்றுவார் கையைச் சட்டென அறுக்கும் அரிநூலும், கை யைத் தொளைத்திடும் ஊசியும், காலால் இடறித் தேய்க்கும் யானையும், மார்பில் உதைத்துத் தள்ளும் குதிரையும், உட லைக் கொம்பினால் கிழிக்கும் பன்றியும், பாய்ந்து முட்டுந் தக ரும், ஓடிவந்து கடிக்கும் குரங்கும், உச்சியிற் கொத்தி மூளை யை எடுக்கும் கோழியும், கண்ணைக்கொத்தும் சிச்சிலியும், எதிர்த்து வந்தவரைத் தள்ளி வெட்டும் தள்ளிவெட்டியும், நூற்றுவரைக் கொல்லியும் முதலிய பொறிகளை உடைமை யின் கொள்ளுதற் கருமையும் பெற்றது.

இத்தகைய அரணைத் தனக்கு அரசிருக்கையாக்கொண்டு வாழும் வள்ளல், இரவலர்க்கும் புலவர்க்கும் தடைபடாத வாயிலுடையோனாதலால், பாணரும், கூத்தரும், புலவரும், பிறரும், பழுமர நாடிய பறவைபோல, இவனை நாடி வந்த வண்ணமாக இருப்பர். இரப்பவர் இன்முகம் காண்பதிற் பெருவிருப்பன். இரந்தவர் மனம் உவக்குமாறு அணிகலமும் ஆடையும் தேரும் களிறும் நல்கி அன்னவரைத் தேர்மீதேற் றிச் செல்லவிடுத்துக் காலின் ஏழடி பின்சென்று மீளுங்கடப்

பாடுடையோன். முற்பகலிற் சென்றிரந்த ஒருவன் பிற்பக லில் வந்து ஏற்பினும் இல்லை என்பதை அறிந்திடான்.

இவ்வாறு இன்புற்றிருக்கு நாட்களில், குரவம் அரும் பக் கோங்கு மலரத், தேமா செந்தளிரீனக், குயில் கூவ மயில் அகவத், தேனும் வண்டும் செவ்வழி பாடத் தென் றல் விளையாடும் வேனிற்பருவத்தில், ஒருநாள் மாலைப்பொழு தில், சூரியன் மேற்றிசைக்கண் தளதளவென் றசைந்து கொ ண்டிருந்தான். செங்கதிர் பரந்த மலைச்சிகரமும் புற்பூடுக ளும் பொன்மயமாக விளங்கின. அடிவான மெல்லாம் அரக் கிட்டு வழித்தது போலச் சிவந்தது. வேனில் வெம்மைக்கு ஆற்றாத வள்ளலும், இளமரக்காவில் தென்கால் நுகருதற் குப் பொற்றேர் மீது புறப்பட்டான். பலரும் வாழ்த் தெடுப் பச் சிறிதிடைச் செல்வதன்முன், நிறைகுடந் தாங்கிய மங்கையர் எதிர்ப்பட்டனர். அன்னவன் வலத்தோளும் புருவமும் துடிக்கலுற்றன. காரணந் தோன்றாமல் உள் ளத்தில் உவகை ததும்பிற்று. வழிச் செல்வோரில், திரைகவுள் நரைமுதியோன் ஒருவன் தன்னை வண ங்கிய இளைஞனை, 'விரைவில் நினக்குக் கடிமணம் ஆகுக' என்று ஆசிகூறும் நற்சொல்லும் செவிப்புலம் புக் கது. இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாய் நிகழும் நன்னிமித்தங் களை மனத்தில் ஆராய்கின்றவன், முன்னையினும் பன்மடங்கு மகிழ்ச்சியோடு சென்று சோலையிற் புகுந்தனன்.

வள்ளல் வரக்கண்ட புனங்காப்போன், எதிர் வந்து வணங்கி, ஒருபுடை ஒடுங்கி நின்று, அண்ணலே! 'நின் வருகை நல்வரவாகுக; நீயும் நின் சுற்றமும் நீடு வாழ்க' எனத் தொழுது முன் செல்ல, வளங்களை நோக்கிப் போகும் வள்ளியோன், பசும்புற் செறிந்த இடமும், அரக்காம்பல்

மலர்ந்த தடமும், அரும்பிப் பூத்து அயலிற் படர்ந்த கொடியும், கனிந்து தாழ்ந்த மறச்செறிவும் ஓரிடைக் குழீஇயிருப்பக் கண்டான். அவ்விடம், பச்சைக்கம்பளம் பரப்பி, விளக்கேற்றிப், புன்னகைசெய்து, முகமலர்ந்து, கையிற் கனியேந்தி, தன் வரவேற்றுப் புனமங்கை நிற்பதுபோல் இருந்தமையின் அங்குச் சிறிது நிற்பானாயினன்.

அஃதறிந்த காவலோன் 'இவ்வனமகளே யன்றி, மலைகளும், நின்னைக் கண்ட ஆர்வமிகுதியால் உள்ளம் நெக்குருகி, அருவியெனக் கரைந்தோடுகின்றன. சுனைக்குவளைகளும், நின் திருமேனிப் பொலிவைக் காணும் விழைவால் இமையாமல் நோக்கி நின்றன. இவற்றைக் கண்டருள்.' எனப் புன்னகை அரும்பி அப்பால செல்கின்றவன், மலைச்சாரலை நோக்கினன். அங்குச் சிற்றூரில், பலர் கூட்டமும், முழக்கமும், புகைப்படலமும் காணப்பட்டன. இது, பகைவரால் விளைந்த தீமையோ என நினைக்குமுன், கண் சிவந்தன. ஏடா புனங் காப்போய்! 'இஃதென்ன என்றுமில்லாத புதுமை இரைச்சலும் புகைச்சலும்? உண்மையை விரைவிலறிந்து சொல்லுக; யாவரே யாயினும் ஆருக, அவரை இப்பொழுதே என் வாட்படைக்கு உணவாக்குகின்றேன்; பார்' என்று உரப்பினன்.

உடனே புனங்காப்போன், விரைவாக ஓடிச்சென்று, உண்மையைத் தெரிந்து வந்து, வள்ளலை வணங்கி நின்று, ''எம்மைப் புரக்கவந்த இறைவ! அங்கெழும் புகையும், முழக்கமும், பகைவர் நம் ஊரைச் சுடுபுகையும், அதனாலுண்டாகிய பேரிரைச்சலுமெனக் கருதிச் சினங் கொள்ளற்க. அங்கு நிற்போர், நீ காலாற் பணித்த ஒன்றைத் தலையாற் செய்ய வல்ல வேட்டுவர். அவர்கள், தினைடம் சாமையும் இறுங்கும் விதைப்பதற்காக நிலத்தைப் பண்டுபடுக்கவேண்டி,

அகிலும் ஆரமும் தேக்கும் தடிந்து புனத்தின்கண் எரிமடுக்கின்றனர். இதனாற்றான் புகைப்படலமும், அனற்கொழுந்தும் உண்டாயின.' 'எம்பெருமானே! இன்னும் கேட்டருள்; அவ்வேட்டுவர், தமக்கு விளைவும் வேட்டமும் வாய்ப்ப வேண்டிக், கடம்படிகளில் கோழிக்கொடிகளை நட்டு, மறியறுத்துப் பலியிட்டுச் சிறுதினையும் செம்மலருந் தூவித், தொண்டக முழங்க முருகியும் கறங்க முருகவேளை வழிபட்டுத் துணங்கையாடிக் களிக்கின்றனர். இவர்களையன்றிக் கொடிச்சிமாருட் சிலர் தன்சுனை குடைந்து தழையுடுத்துச் சினைமலர் கொய்து சிலம்பெதிர்கூவிக் குயிலொடுபாடி மயிலோடாடுகின்றனர். சில வேட்டுவமங்கையர் வேங்கைப் பூவின் தாதுபரந்த கற்பாறைகளைப் புலிக்குருளை என்று கூறித் தம் மக்களை அச்சுறுத்தி, அழுகை தீர்க்கின்றனர். புலி! புலி!! எனக்கூவ, அஞ்சித் தாழ்ந்த வேங்கையில் மலர் கொய்வாரொருசிலர். சிலர் வட்டமாகக் கைபிணைந்து நின்று, 'நின் வென்றியும் புகழும்' விளங்கப்பாடிப், புலிப்பற்றாலி புறங்கிடந்தசையக் குரவைக்கூத் தயர்வாராயினர்.' 'அண்ணலே! இவை யெல்லாம் ஒருங்கு சேர்ந்தன்றோ, நின்னைப் பலவாறு நினைத்து ஐயுறச் செய்தன. நின்னை எதிர்ப்போர் நீணிலத்தில் உண்டோ?'' எனச் சொல்லி அடிபணிந்தனன்.

இவை யனைத்தையும் கேட்டுணர்ந்த வள்ளல், சினந்தணிந்து, 'காவலோய்! நன்று நின் செய்கை; இங்கு நிற்க' எனப் பணித்து, அப்பாற் செல்கின்றவன், ஒரு வெள்ளிடையில், மரகதம் போலப் பச்செனத் தழைத்து, மங்கையர் நகையென வெண்முகை அரும்பிய ஓர் முல்லைக்கொடி, படர்வதற்குக் கொழுகொம் பின்மையால், தென்றலாற் றுவண்டு வீழக் கண்டனன். அது, 'தாங்குநர் இன்றித் தளர்கின்

றேன்; என்னைக் காத்தல் நின்பரம்.' எனப் பல்லெலாந் தெரியக் காட்டித் துணைக்கரம் விரித்து நீட்டிக், கீழே விழுந்து முறையிடுதல் போலத் தோற்றவே, 'இதற்கு யாது உற்றது? அடுத்தறிகுவம்' என்று நினைத்துக் கொடிக்கருகே தேரை நடத்திச் சென்றான். 'அன்பிற்கும் அடைக்குந்தாழில்லை.' ஆதலால், பன்முறையும் பரிவோடு நோக்கி, ஆ! ஆ!! என்ன பாவம்! மண்ணிற் பிறந்தாருள் துன்புறாதார் யார்? எவருமில்லை; இஃது ஒரு கொடி எனினும், இதற்கும் ஒரு குறையுண்டு போலும்! அதனாற்றான் நாம் வரும் திசை நோக்கித் தொழாநின்றது. இதன் குறையைப் போக்கிடவேண்டும் எனத் தனக்குள் முடிவு செய்து கொண்டு, "ஏ முல்லையே! ஏன் தயங்குகின்றனை? இனித் தளர்வதை விட்டொழி; நீ சொல்லாடப் பெற்றிலாமையின், நின்குறையை எமக்குணர்த்தும் திறம் பெற்றிலை; ஆயினும் என்? நேரிற் கண்டறிந்த யாமே அதனை இப்பொழுதே ஒழிக்கின்றோம்; நாத்தழும்பேறப் படாத நீயும், இதனைப் பெற்றுக் கவலை நீங்கி மகிழ்க' என்பவன் போலத் தன் தேரை அதன் பக்கத்தே நிறுத்தி விட்டு, வரிசிலை ஏந்திய வடிவு கொண்ட காமனைப்போலக், கழலடி சிவப்ப நடந்து சென்றனன்.

## II

இவன் செய்கை இவ்வாறாக; பறம்பு மலையின் ஓர் புறத்தில் முருகவேள் என்றொரு வேளிர் தலைவன் இருந்தான். இவனுக்குத் திருவினுஞ் சிறந்த உருநலம் வாய்ந்த பன்னீராட்டைப் பிராயத்து ஒரு மகள் இருந்தனள். இவள் பெயர் நங்கை. இந்நங்கை, நம் வள்ளல் வருமுன்னர், விளையாடுவதற்காக, விண்மீன் நடுவிற் செல்லுந் தண்மதிபோல, ஆயவெள்ளம் புடைசூழ அப்பொழிலை அடைந்து, வேங்கையிற்

படர்ந்தேறிய பூங்கொடியில் ஊசலாடிய பின்னர், தேமணங் கமழும் ஓர் சுனைக்கரையில் பளிக்குப் பாறைமீது தென்முக நோக்கி இருந்தனள்.

அப்பொழுது பனிநீரிற் றோய்த்த சிவிறி கொண்டு பாங்கியர் மென்மெல அசைத்தல் போலக் குளிர்ந்த மணம் அளாவிய இளந்தென்றல் வீசலுற்றது. அதனால் அயர்வு நீங்கி மனமகிழ்ந்து, முகமலர்ச்சிகொண்டனள் நங்கை. அஃதுணர்ந்த ஆயவெள்ளம் வழிபட்டு, 'அன்னாய்! நெடுநேரம் விளையாடித் திருமேனி வருந்தினை; இனி எம்மோடு வருவையாயின் நின் மலர்ப்பதங் கன்றும்; ஆதலின், இளைப்பு நீங்க இங்ஙன் அமர்தி; யாங்கள் சென்று நீ விழையுந் தழை தொடுத்து வருகின்றோம்; தண்மலர் கொய்து கண்ணி பிணைகுதும்; நினக்கான தீங்கனியும், தேம்பிழியும் தேடிக்கொணர்வோம்' என்று ஒவ்வொன்றை முன்னிட்டு, ஒவ்வொருவர் பிரிந்து போயினர்.

இவ்வாறு யாவரும் சென்றபின், வாட்டம் நீங்கித் தன்னந்தனியே யிருந்த நங்கைக்கு, இன்னிசையில் மனஞ்செல்ல, ஓவியத்துறையில் வல்ல ஒருவன் எழுதிய பாவைபோல, உடற் குற்றம் சிறிதுமின்றி அசைவற இருந்து, கேட்டவர் உளத்தை உருக்கவல்ல நைவளம் என்னும் பாலைப்பண்ணை மூவகை இயக்கினும் முறை தெரிந்து பாடுவாளாயினாள்.

இவ்வின்னிசையைக் கேட்டவுடனே, ஆறலைத்து உயிர் வாழும் மறவரும் தம் கையிலிருந்த படைக்கலங்களைப் போக விட்டு, அருள்மேவிய உள்ளத்தராயினர்; அறுகருந்திய ஆனினமும் மானினமும் அசைபோடல் ஒழிந்தன; தாய் மடியில் வாய்வைத்த பசலைக்கன்றும் பால் உண்ண மறந்தன; பாம்புகள் படமெடுத்த வண்ணம் அசைவற்றிருந்தன; கான

வர் பசுங்குழவிகள் அழுகை ஓய்ந்து கண்ணயர்ந்தன; பறவைகளும் தீய விலங்குகளும் தத்தம் செயன் மறந்து அருகணைந்தன; மரங்கள் சலித்தில; கான்யாறும், அருவிகளும் கலித்தோடில; இவ்வண்ணம் நிற்பனவும் நடப்பனவும் இசைமயமாயின.

ஊழினும் பெருவலியுடையது பிறிதில்லை யாதலால், சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய கோமானும், தான் கண்டுவந்த நன்னிமித்தங்களை உள்ளத்திற் சூழ்கின்றவன், தன்னையறியாது வழிதவறி, நங்கையிருந்த நாண்மலர்ச் சோலையிற்புகுந்தான். அங்குவேற்றொலி விரவாமல், இன்னிசை மயமாயிருப்பக்கண்டு, வியந்து, நாற்புறமும் சூழ நோக்கினான். ஒன்றும் கண்ணிற் புலப்படவில்லை; ஆனால், யாழிசையோ! குழலிசையோ! என்று ஐயுறும் வண்ணம் பண்ணிசை மட்டும் செவியிற் புக்கது. அப்புறம் செல்வதற்குக்கால் எழாமையால், அங்ஙனே நின்று சிந்திப்பான்.—

நிலை விலங்குபூட்டி வைத்தது போல, என்னைப் புறஞ்செல்லவொட்டாமற் றடைப்படுத்திய இப்பொழில், ஏழிசைச் சூழலோ! அன்றேல், விஞ்சையர் மேவும் பைம்புனமோ! அறிந்திலேன். இவ்விடத்தின் இயல்பு இதுவாக, இங்கெழும் பண்ணிசை, செவிக்காலோடி இன்னுயிர் தழைய இன்பம் பயக்கின்றதே! இஃதென்ன அமுத வெள்ளமோ! ஆ! ஆ!! கேட்குந்தோறும் உள்ளமே யன்றி என் என்பும் உருகுகின்றதே! இத்தகைய சிறந்த இசைக்குக் காரணமாருயிப்பதனைக் கண்டறிகுவம் என்றெண்ணி, இசையெழும் திசைநோக்கிச் சென்றவன், அழகெலாம் திரண்ட பசும்பொற் பாவைபோல, அசைவற இருந்துபாடும் நங்கை அமர்ந்த இடத்தை அடைந்து, அன்னவளைக் கண்ணுற்றான்.

இஃதென்னை, வியப்பினும் வியப்பு! அழுமுகங்கோடல், தலையசைத்தல், மிடறுவிம்மல், பற்காட்டால் முதலிய குற்ற மின்றி அசைவற இருத்தலின், பொற்பாவைகொல்! அன்றி, ஓவியமோ! என்று நயப்பவன், பின்னும் நெருங்கிச் சென்ற னன். கண்ட நங்கையும், அச்சமும் நாணமும் தலைக்கொள் ளச் சரேலென எழுந்து, 'புனைமலர்க்கொடி அணிநடைகற்ப' தென நடந்து போய்ச், சந்தனமரத்தருகே தலைசாய்த்து நின்றனள்.

வேளிர்தலைவனுக்கு வேட்கை மீதூர அறிவழிந்திட நினைக்கின்றான்.—கண்ணைப்பறிக்கின்ற இவ்வுருவிண்ணின் ளும் இறங்கிய மின்கொடியோ! மின்னலெனின், விண்ணில் இயங்குவதல்லது, மண்ணிடை இயங்காதே! வானிலும் கண்டபொழுதே மறைவதன்றே! அதற்கு மாறாக இந்நேர மளவும் விளங்கித் தோன்றலின் மின்னென்பது கூடாது; பிறிதொன்றா யிருத்தல் வேண்டும்; உற்று நோக்குவம் எனத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு பன் முறையும் நோக் கினன். மின்னலன்று; தாமரையும், ஆம்பலும், நீலமும், காந் தளும், முல்லையுமென்ற இன்னமலர்கள் காணப்படுகின்றன; இவை காணப்படுதலின், இவற்றான் இயன்றதொருமாலை என் பனேல், மலர்மாலை மணங்கமழு மல்லது, தண்ணிய அமு தென இன்னிசை பாடுமோ? பாடாதென்றே? பாடு கின்றமையின், என கண்ணை விட்டகலாத இவ்வுரு விண் ணுறை அணங்கோ! விஞ்சையர் மகளோ! வரைவளர் தெய் வமோ! தெரியவில்லை எனப் பலவாறு நினைத்து மயங்கு வோனுக்கு, 'நடுக்கடலில் திசை மயக்கிச் செல்பவனுக்குத் திடீரெனத் திசையறி கருவி கையகப்பட்டது' போல, ஒரு ஆராய்ச்சி பிறந்தது.—தெய்வமகளிர்க்குஆடையின்கண்மாசு

படியாது; சூடிய கண்ணி வாடுதலும், பூசிய சாந்தம் புலர்தலும் இல்லை; கால் நிலந்தோயா ; கண்ணிமைத்தலும், வேர் வரும்பலும், உடல் நிழலிடுதலும் உண்டாகா; ஆடவரைக் கண்ட போது அச்சம் தோன்றாது. இம்மங்கையர்க்கோ என்றால், உடுத்துள்ள ஆடையில் அழுக்கேறி யுள்ளது கண்ணியும் சாந்தும் என்னுள்ளமே யென வாடிப் புலர்கின்றன ; நிலந்தோய்ந்து நடத்தலிற் பயின்ற அடியும், புடைபெயர்ந்து பிறழும் கண்ணும், என்னைக்கண்டபோது அஞ்சி வியர்த்திட்ட மேனியும் உடையாள்; ஆதலால் தெய்வமல்லள், இந்நிலத்து வாழும் மங்கையரில் ஒருத்தியே ஆதல் வேண்டும். எனத் துணிந்தனன்.

இதுகாறும் மங்கையரை நினைத்தறியாத தன் மனம் இந்நங்கைபாற் சென்றதால், திடுக்குற்ற வள்ளல், 'பிறர் தோள் மணந்த பேதையோ அல்லளோ ஆராயாது என்னுள்ளம் இவள்பாற் சென்றது என்னை பாவம்! எனக் கலங்கி அன்னவளது அடிமலரை நாடினன். காலிற் சிலம்பிருக்கக் கண்டு, ' நான் செய்த நல்வினைப்பயன் இருந்தவாறென்னே ! மணவினை கழியாத இம்மங்கை என்னால்விரும்பத்தக்கவளே' என நெருங்கிச் சென்று, மாதரரசே! முத்தநகைமானே ! சுனை குடைந்து மலர் கொய்து விளையாடாமல், தவஞ்செய்வோரைப் போலத் தனித்திருக்கக் காரணமென்ன ? எனப் பன்முறையும் தன்குறை சொல்லி யிரப்பவும், நாணத்தால் வாய் பேசாது வாளா இருக்கக் கண்டு, வள்ளியோர் தலைவன் வண்டிற்கு உரைப்பவன்போல், ' ஏ வண்டே! பலவகை மலரினும் பயின்றுள்ள உனக்கும் இத்தடுமாற்றம் ஏன்? காந்தளெனக் கருதிக் கறங்குபோற் சுழல்கின்றனையே ; அவைகள் என்னுயிர் அனையாளது கைகளன்றே? அரக்காம்பல் எனப்

பரபரப்பாய் நோக்குகின்றனே ; வாய் என்ப தறிகிலேயோ ? உண்ட பொழுதில் உணர் வொழிக்கும் கள்ளென்பர் ; கள் வெறியால் கண்மயக்குற்றனே போலும் ; நன்று நன்று நின் பேதைமை ; மங்கையர்க்கு இடை, நூலினும் நுண்ணி தன்றே ? இடைக்கு வேறு வகையால் தீங்குவரின், 'காக்கை யேறிப் பனம்பழம் வீழ்ந்தது' என்பது போலப் பழிநி னக்கே வந்தடையும் ; ஆதலின், அகல நீங்குதி எனவண் டோச்சுவான்போல் நலம் பாராட்டக் கேட்டுச் சிறிது புன் னகை யரும்பிக் கடைக்கணித்தாள்.

**'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொ ற்க-ளென்ன பயனு மில.'** என்பர் செந்நாப்புலவர். இவளும் நாணத்தாற் பேசமாட்டாது, திகைத்தனளேனும், என்னி டத்தில் தனக்குள்ள அன்புடைமையை இன்னவள் கண்கள் வெளியாக்கின. இதனாற்கண்ணிற் சிறந்த உறுப்பில்லை என் பதும் கண்டுகொண்டேன். இனி, இவள் தந்தை மனமுவந்து கொடுப்பக் கொண்டு, கனற்கடவுள் சான்றாக மணம் புரிவதே தக்கது எனக் கருதித் தன் கோயிலை அடைந்தனன்.

## III

தன்னகரிற் புக்க வள்ளலும், கபிலரை உள்ளிட்ட பெரி யோரை அழைத்துவர ஆட்போக்கி, அன்னவர் வருகை மேன் மனம் வைத்து, அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந் தனன். ஏவலாளர் உணர்த்த உணர்ந்த சான்றோரும் அர சிருக்கையை வந்தணுகினர். கண்டவள்ளல், இருக்கைவிட் டெழுந்து, எதிர் சென்று வணங்கி, முகமன்கூறி, அழைத் துப்போய், அணைமீதமரச் செய்து, பின்பு தான் ஒரு புடை இருந்தனன்.

அப்பொழுது, அந்தணர் பெருமானாகிய கபிலர், 'வள்ளால்! நீ எம்மை உள்ளியது என்' என்றனர். அவனும், 'பெரியீர்! நம்மலைக்குக் கீழ்பால் எம்மொடு ஒத்த மரபினன் முருகவேள் என்பான் ஒருவன் உளனென்பதை நீவிர் அறிவீர்; அவன் மகள் நங்கை என்பவள் நாம் மணத்தற்கேற்ற நலனுடையாள்; அன்னவளை எமக்காகமணம் பேசுதற் பொருட்டு உம்மை வேண்டினன்.' என்றனன். அவர்களும் அதற் கிசைந்து முருகவேளிடைச் செல்ல, அவன் பல்வகைத்தாய வழிபாடுகள் செய்ய, அவருட் கபிலர், அவன் முக நோக்கி, 'வேளிர் தலைவ! நினக்கு நன்மை உண்டாகுக. கேளாய்.

உலகில் ஒரு பெண்ணின் சுற்றத்தார், அப்பெண்ணை மணப்பவன் உயர் குடியிற்பிறந்தவனாதல் வேண்டும் என்பர். தம் மருகன் கற்றவனாக இருத்தல் அமையும் எனத் தந்தையும், செல்வத்திற் சிறந்தவனாக வேண்டுமென அன்னையும் நினைத்திருப்பர். கன்னியரோ வென்றால், கட்டழகும் இளமையும் வாய்ந்தவனே போதுமென்பர். ஆதலால், குடிப்பிறப்பும், கல்வியும், செல்வமும், அழகும் ஒருங்கமைந்த மருமகன் கிடைப்பது அருமையாதல் நோக்கிப் பெண்மகப்பெற்றோர் பெரிதும் வருந்தியிருப்பர்.

இது இவ்வாறாக, பறம்பிற் கோமானாகிய பாரி எவ்விகுடியிற் பிறந்த செவ்வியோன் என்பதை நீ அறிகுவை; கற்றதோ டமையாமல் கற்றோரை நீங்காத் துணையெனக் கொண்டொழுகும் பெற்றியன்; முந்நூறூர்களைத் தன்பாற் கொண்ட பறம்பு நாட்டை ஆள்பவன்; பெற்ற பெருவளம் தனக்கே உரித்தெனக் கருதாமல், மற்றவர்க்கீதலும், இசைபட வாழ்தலும் உரியோன்; அழகும், இளமையு மன்றி, ஆற்றலுமுடைய ஆண்டகை; ஒன்றினும் குறைபாடிலாத இங்கம்

பிக்கு நின்மகள் நங்கையை மணம்பேச வந்தோம்.' என்று முன், முருகவேள், உவகை நிரம்பிய உள்ளத்தனாய், 'பெண் பெற்றோரிற் பேறு பெற்றோன் நான் ஒருவனே போலும், நான் செய்த தவமே நற்றவம்.' என உரைத்து, மகட்கொடுக் கமனம் ஒருப்பட்டனன்.

புலவர் பெருமான் அங்கு நின்றும் புறப்பட்டுப் பறம்பு மலையிற் பாரியின் நகரை அடைந்து முருகவேள் மகள்தர இசைந்ததை உரைக்க, பாரி, அகத்தெழுந்த உவகையை முகத்தால் எழுதி நீட்டி, இங்கிதத்தால் வெளியாக்கி, முகமனுரைத்து அவரை யனுப்பிய பின்னர், மணநாள் குறித்துத் திருமுகம் போக்கி, வள்ளுவனைக் கூவி, 'இற்றைக்கு மூன்றாநாள் நம் திருமணம் நடைபெறும். என எங்கும் முரசறைக' என்று கட்டளையிட்டனன்.

வள்ளுவன் முரசறைந்து மணநிகழ்ச்சியை நகரிலுள்ளவர்க் குணர்த்தினன். காற்சிலம்பு களைந்த பிறகு மணநடத்தல் வழக்காதலால், நங்கைக்கு காற்சிலம்பு களையும் நல்விழா நடைபெற்றது. அதன் பின்னர், பொற்கால் நிறுத்திய முத்துப்பந்தரில் மங்கையரும் மைந்தரும் சூழீஇ யிருக்க, முரசியம்ப வாச்சிய முழங்க, கணிமொழிந்த நாளில், அந்தணர் மறைவழிச் சடங்கியற்ற, மங்கல நாண் பூட்டி, நங்கையைக் கைப்பற்றித் தீவலஞ் செய்து, அம்மி மிதிப்பித்து அருந்துதி காட்டி, மணவமளியில் வீற்றிருந்தனன் வள்ளல். ஆன்றோர் ஆசி கூறினர். மங்கையர், 'இந்நங்கையும் தன்காதலனைக் கண்ணினும் நெஞ்சினும் பிரியாதிருப்பாளாக ; இவள் காதலனும் இவளிடத்து நீங்காத அன்புடையோனுகுக இருவர் அன்பும் என்றும் ஒருபடித்தாக.' என நினைந்து தம் வழிபடு கடவுளை மனத்தால் வணங்கிச் சிலமலரைத் தூவி வாழ்த்தினார்கள்.

இவ்வண்ணம் மணம் முடிந்தபின், வள்ளலும் நங்கையும், ஓர் ஆவிற்கு இருகோடு தோன்றினாற் போலத், தம்மில் ஒத்த அன்புடையராய், அறவோர்க் களித்தலும், அந்தணரோம்பலும், துறவோர்க் கெதிர்தலும், விருந்தெதிர் கோடலு முதலிய அறத்தில் வழுவாமல் இல்லற நடத்தி, இன்புற்றிருந்தனர்.

சில யாண்டுகள் கழிய, திருவும் காமுறு வனப் புடைய நங்கை இரண்டு பெண்மகவை ஈன்றெடுத்தனள். முதியோரால் அங்கவை, சங்கவை எனப் பெயரிடப் பெற்ற அம்மக்கள், வாழை இளங்குருத் தெனவும் பிறைமதி போலவும், நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்வாராயினர். அன்னவர், யாழினும் குழலினும் இனிய மழலைச் சொற்களைச் செவியால் நுகர்ந்தும், சிறுகை அளாவிய கூழை அமுதினும் இனிதாக வுண்டும், மழலை ததும்ப மார்பையுந் தோளையுந் தீண்டி ஆட உடற்கின்ப முற்றும், சிறு சதங்கை கொஞ்சத் தத்தடி வைத்துத் தளர்நடையுற்றுச், சிற்றில் கோலிச் சிறு சோறட்டுப் பருவந்தோறும் விளையாடும் சிறு விளையாடல்களைக் கண்டு களித்தும் இனிதாக இருந்தனன்.

இப்படியிருக்கையில், அவர்க்கு கற்பதற்கேற்ற பருவம் வந்தது. ஒருவர்க்கு நன்மை தீமைகளை நன்கு விளக்கி, அல்வழியிற் புகாமற் றடுத்து, நன்னெறியிற் போக்குவதில் கண்ணென்று சொல்லப்படும் கல்வி. கல்வியுடையவரே கண்ணுடையவர், கல்லாதார் முகத்திரண்டு புண்ணுடையவரே. கல்லாதார் மக்கள் உடம்பிற் பிறந்திருந்தும், விலங்கினை ஒப்பாவார்; அன்றியும், மக்களுட் பதடியுமாவார். கேடில் விழுச் செல்வமாகிய கல்வியைப் பெற்றவர், நீரால், நெருப்பால், கள்வரால் தாயத்தாரால், பிறரால் அழிவுறும் ஏனைச்செல்வத்

தைச் செல்வமென மனங்கொள்ளார். 'கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லான், மற்றோ ரணிகலம் வேண்டாவாம்.' என்பதற் கேற்ப, கற்றவர், குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும் மஞ்சளழகையும் மதித்திடார். கற்பக் கழி மட மஃகும். மடமை நீங்கின் அறிவுண்டாம். அவ்வறிவு, தொடு மணற்கேணி நீர் சுரப்பது போலக், கற்குந் தோறும் பெருக்க முறும். அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும். ஒரு பிறப்பிற் கற்ற கல்வி, அதனைக் கற்ற அவ்வுடம்போடு ஒழியாமல், உயிரோடு எழுபிறப்பினும் செல்லும் ஏமாப் புடைத்தென்பர். உயர்ந்தோரால் உறுதியென எடுக்கப்பட்ட நாற் பொருளையும் தரவல்லது கல்வி யெனின், இதனினும் சிறந்தது என்னுளது? என்று சிந்தித்து, வள்ளல், தம்மக் களைப் புலவர் பெருமான் கபிலர்பால் விடுக்க, அம்மக்களும், கசடறக் கற்றுத் தேர்ந்து, நல்லிசைப் புலமை வாய்ந்த மெல் லியராய் விளங்க, ஈன்ற நாளினும் பெரிதும் உவப்புறுவாரு யினன்.

## IV.

பறம்பிற்கோமான் பாரியும், நெடுஞ்சுரத்து நின்ற தனி மரம் போலத், தன்னை வந்தடைந்தவர் மேலோர் கீழோர், கற்றவர் கல்லார், நண்பர் பகைவர், என வேற்றுமை நாடா து, யார்க்கும் ஒரு படித்தாகக் கொடுத்தலை மேற்கொண்டு, தனது அரசிருக்கையாகிய பறம்புமலை யொழியத் தன்னாட்டு முந்நூறூர்களையும், ஏனைச் செல்வங்களையும் இரவலர்க்கே ஈந்து, 'மலர்ந்த மார்பின் மாரிவண் பாரி,' எனப் புலவர் எடுத்துரைக்கத் தமிழகமுழுவதும் புகழ்மயமாக்கி வாழ்ந்தி ருந்தனன். இவன், செல்வத்திற் சிறியனாக இருந்தும், புக ழில் தம்மினும் பெரியனாக வாழ்ந்திருப்பக் கண்ட தமிழ்

நாட்டு முடியுடைவேந்தர் மூவரும் அழுக்காறு கொண்டனர். அஃதோடமையாமல், இவனைத் தம் பகைவனுக எண்ணிச் செற்றங் கொண்டமையின், தீராக்கோபம் போராமுடிதல் வழக்காதலால், முற்பக்கத்துப் பிறைமதிபோலப் பகையும் நாட்குநாள் முறுகி வளர்வதாயிற்று. மூவேந்தரும் ஓரிடைக் குழீஇ யிருந்து ஒரு நாள் சிந்திப்பாராயினர்.

என்னை? பாரி ஒரு நாட்டுத் தலைவன்; நாமோ, மும் மண்டலத்திற்கும் வேந்தர். செல்வத்திற் சிறியனெனினும், புகழில் எம்மினும் மேம்பட்டவன். ஆற்றலுடையனே யாயி னும், 'மிண்டனுக்கு இரண்டாள்' என்பதிற்கிணங்க, நாம் மூவரும் எதிர்த்திடின் இவன் வன்மை யாதாய் முடியும்? ஆதலால் நாற்படை சூழ்தர நாம் போய், இறுமாப்படங்க இவனை வென்றிடல் வேண்டும்; அன்றேல், சூழ்ச்சியாற் கொன்றிடல் வேண்டும்; இவ்விரண்டில் ஒன்றைச் செய்யா விடின், நம்மை எவரும் மதித்திடார்; இதுவே என் கருத் தென்றனர் ஒருவர்.

அதைக் கேட்ட மற்றொருவர், நிலமும், நட்பும், பொருளுமாகிய இவற்றில், தன்னிடத்தும் பகைவனிடத்தும் உள்ளன நாடி, மாற்றானினும் தன் பாலுள்ளவை மிக்கிருக் குமாயின் எதிர்க்க வேண்டும்; வென்றியும் தோல்வியும் ஒரு வர் பங்கல்ல; ஆதலால், மாற்றனது வலியும் வலியின்மையும் நன் கறிந்த பின்னர், எது செய்யத் தக்கதோ அதனைச் செய்யவேண்டும் என்று கூறினர்.

மூன்றும் அரசர் கூறுகின்றார். நன்று நன்று நும் சூழ்ச்சி! இவனை நாம் அறியமாட்டோமா? இவன் நம்மி னும் வலியன் எனினன்றோ இவற்றை எல்லாம் ஆராய்தல் வேண்டும். நாயை யடிக்கக் குறுந்தடியும், நச்சுப் பூடை

ஒழிக்க நாளும் ஞாயமும் வேண்டுமோ? நமது புகழைத் தலையெடாவண்ணம் தடுத்து நிற்கும் இப் புன்களையை இனிக்காலம் நீட்டியாது களைவதே தக்கது என, மூவரும் மனம் ஒருப்பட்டும் போர்புரிதல் இன்றியமையாத தென முடிவு செய்தனர்.

உடனே மூவேந்தரும் அயலில் நின்ற கம்பியரை நோக்கிப், 'பறம்பரணை முற்றுகைபோடக் கருதினோம்; பண்ணுக வயக்களிறு; பண்ணுக வயப்புரவி; பண்ணுக கணிப்பில் பல தேர்; நண்ணுக படைச்செருநர்.' எனக்கட்டளையிட்டனர்.

உழுந்து கண்ணடியில் உருளுமுன் நாற்படையும் வந்து கூடின. நாற்கடல் நடுவில் முச்சுடர் செல்வதென, மூவேந்தரும் போர்க்கோலங் கொண்டு, தும்பை மிலைந்து, கொய்யுளை பூண்ட கொடிஞ்சி நெடுந்தேர் மீது புறப்பட்டனர். சாமரை இரட்டினர்; வெள்ளொளியல் வீசினர். கொடி எடுத்தனர். குடை நிகழ்ற்றினர்; முரசு முழங்கின; வளைகள் நரன்றன; காடிகை யார்த்தன; முழவம் இயம்பின;

'முடியுடை மன்னர் வந்தார்; முத்தமிழ் நாடர் வந்தார் [தார்
வடிகொள் வேர்படைஞர் வந்தார்; வாம்பரிக்கோநவர் வந்
இடியென முழங்கும் வென்றி ஏறுபோல் வார்கள் வந்தார்
படிப்பொறை மாற்றல் வல்ல பார்த்திபர் மூவர் வந்தார்.'

எனத், திருச்சின்னம் பணிமாறின. எள்ளிடுதற்கும் வெள்ளிடையின்றிச் சேனைகள் பரந்து சென்றதால், அடவியெல்லாம் அரும்பொடி யாயின; அருவிகள் அனல் பட்டன; தொல்வரைகள் துகள் பட்டன; களிற்று முழக்கமும், கவினமான் கனைப்பும், தேர்செல் ஓதையும், செருநர் ஆர்ப்பும் திசைகளைப் பிளந்து சென்றன. தூசிப்படையும் பறம்பரணை அணுகிற்று. அப்பொழுது,

'ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணியுடை யீரும், பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின் ;'

எனப், பறையொலி கேட்டது. நகர முழுவதும் அல்லோல கல்லோல மாயிற்று. இவ்வனைத்தையும் நன்குணர்ந்த ஒற்றர்கள் காற்றெனக் கடிது போய்ப், பாரியின் கோயில் புக்கு வணங்கி, 'எம் பெரும! இது கேட்டருள் ; வேந்தர் மூவரும் அந்தமில் படைசூழ நந்தம் நகர்ப்புறத்துற்றனர். முன்னுற்ற தானை மூதரண் வளைந்தது என்றனர்.

கேட்ட அப்பொழுதே, வள்ளல், நாட்டஞ் சிவந்தனன்; பற்கள் நற நற வென்று கடிக்கலுற்றன ; மீசைகள் துடித்தன ; புருவம் நெற்றிமேற் சென்றது. 'என்னுடைய தோள் வன்மையும், வாள்வலியும் அறிந்திடாது போர்க்கெழுந்த இவரது பேதைமை என்னே !' எனக் கட கட வென நகைத்துப் புலிப்போத்தென ஆரவாரித்து, 'நம் தானைகள் முன் சென்று அரணைக் காவல்செய்க ; யாமும் ஒல்லையில் வருகின்றோம்.' எனப் பணித்திட்டு, இருக்கைவிட்டெழுந்து, படைக் கலசாலை புக்குப் போர்த்தெய்வம் பராவி, இடையிற் கச்சு வீக்கி உடைவாள் செருகி, மார்பிற் கவசம் பூண்டு, வெரிந் புறம் தூணியார்த்து விரலிற் புட்டி லணிந்து, கையிற் கோதை கட்டி, வில்லும் வேலும் வாளும் தோலும் கைக்கொண்டு, காலிற் கழல் அணிந்து, நொச்சி மிலைந்து, கலினமான் மேற்கொண்டு போய்க் கடிமதில் காத்திருந்தான்.

எடும் எடும் படைக்கலம் விடும் விடும் என்பார் ஓசையே மலிந்திருந்தது. எய்யென்பாரும் எறியென்பாரும், குத்

தென்பாரும் கொல்லென்பாரும், வெட்டென்பாரும் வெல்லென்பாரும் ஆயினர் எவரும்.

சேனைகள் இவ்வாறு ஆரவாரித் தெழவே, அதிர்ந்தன திசைகள்; பிதிர்ந்தன மலைகள் ; ஆழிகள் வாயடங்கின ; மலையொடு மலை பொருதென, யானைகள் தம்மிற் பொருதன ; அலையும் அலையும் அமர் புரிந்தாலெனப், பரியொடுபரி மலைந்தன; முகிலும் முகிலும் மோதிறற்போலத், தேரொடு தேர் தாக்கலுற்றன. அரியும் அரியும் அமர்க்கெழுந்தது போல், அரசரோடரசர் போர் தொடங்கினர்.

அவ்வளவில் வீரர்கள் கண்கள் கனலை வீசி மின்னின ; அவர் கைச்சிலைகள் இடி முழக்கஞ்செய்து கணை மழை சொரிந்தன. குருதி வெள்ளம் பெருக்கெடுத் தோடிற்று. அவ் வெள்ளத்தில் வெட்டுண்டு பிளிற்றி வீழ்தரு களிற்றினம், முழங்கிப் படிந்து நீருண்ணும் முகிலினம் போன்றன ; கவிகையும் கவரியும் நுரைபோல் மிதந்தன ; வேலும் வாளும் மீனென ஓடின ; ஆயிடைக் குருதி படிந்துண்ட காகம், புதுப்புனல் வரக் கூவும் செம்போத்தாயின ; ஞமலி ஞெரேலெனக் குரைப்ப, நரிகள் ஊளையிடப் பேய்க்கணங்கள் குழீஇ நின்று ஒலித்தல், வெள்ளம் வரக்கண்ட களமர், கலிப்பறை கறங்கக் கையெடுத் தார்த்துச் சூழ்ந்ததை ஒத்திருந்தது. பறம்பரணும் அடைமதிற் பட்டது.

போர் நிகழுங் காலத்து மதில் அடைக்கப்படின், அகத்து வாழ்வார், உயிர் வாழ்தற்குப் போதுமான விளையுளை விளைவித்துக் கோடற்கு வேண்டும் நிலங்களும், நீர் நிலைகளும் உடையதாகப் பாரியின் பறம் பரண் அமைக்கப் பட்டிருந்ததால், மதிலகத்திருந்த குடி படைகளெல்லாம், உணவைக்குறித்துக் கவலுறுமல், போர் புரியும் ஊக்கத்திற் குறையாதிருந்தனர்.

இம்முற்றுகை, ஒரு நாளல்ல, ஒரு திங்களல்ல, ஒரு யாண்டல்ல, பலயாண்டளவும் நிகழ்ந்தமையின், உணவுப் பொருள்கள் குறைபட்டன. அவ் வமயத்துப், பாரியோடு அங்கிருந்த புலவர் பெருமானாகிய கபிலர், கிள்ளைகளை வளர்த்துப் பழக்கி விடுத்து, அரணுக்கு நெடுந்தூரத்திலுள்ள விளை நிலங்களிலிருந்து நெற்கதிர்களை கொண்டுவரச் செய்து, குடிபடைகளை அருத்திக் கோட்டையைப் பகைவர் கைப்படாமற் காத்து,

‘உடுக்கையிழந்தவன் கைபோல [illegible]
இடுக்கண் களைவதா நட்பு.’ என்னும் ஆன்றோர் மொழிக்கிணங்க நட்புரிமையை விளக்கி நின்றனர்.

இவரது செய்கை இதுவாக, வேந்தர் மூவரும் நெடுங் காலமளவும் முற்றுகை செய்து படைக்கலம் வழங்கவும்,

“நெடும்பகற் கற்ற அவையத் துதவா
துடைந்துளார் உட்குவருங் கல்வி.’ போல அவை யாவும் பயன்படா தொழிந்தன. அரண் கையகப்படாமை யால், மூவர் படையும் ஊக்கங்குன்றிச் சாய்வதற் கெண்ண முற்றன. பாரியின் சேனைவீரர்கள், முன்வைத்த காலைப் பின்னிடாமல் எதிர்த்து நின்றனர். இவ்வனைத்தையுங் கண்ட முத்தமிழ் நாடரும் உள்ளம் நாணித் திகைத்து நிற்கையில், கபிலர்,

‘அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகோண் முரசின் மூவிரு முற்றினும்’
‘கடந்தடு தானை மூவிருங் கூடி
யுடன்றனி ராயினும் பறம்பு கோளற் கரிதே

முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியு முளேம்
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே'

என்னும் செய்யுட்களைப்பாடி, 'நீவிர் முத்திறத்தீரும் ஒருங் கூடிப் படைவலி பெரிதுங்கொண்டு, எத்தனை நெடுங் காலம் முற்றியிருந்து போர்புரியினும், இப்பறம்பரண் நும்மால் கொள்ளற்கரிது; முந்நூறூர்களையும் பரிசிலர்பாடிப் பெற்றதுபோல, நீவிரும் பரிசிலராக வரின் இதனைக் கொள்வ தெளிது.' எனப், பாரியின் புரவலர்க்கு அருமையும், இரவலர்க்கு எளிமையு மாகிய நிலைமை அறிவுறுத்தினர்.

இச் சொற்கள், புண்ணிற் றேய்த்த புளியும், காய்ச்சிப் புகுத்திய நாராசமும் போன்றிருந்தன. 'தக்கா ரினத்தனாய் ஒழுக வல்லானாகிய இவனைச் செற்றாராகிய நாம் செய்யக் கிடந்தது என்? இவனை யன்றி இவன் படையும் கூற்றுவன் சினந்து போர்க் கெழினும், அஞ்சாமல் எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையது; ஆதலால், இவனைப் போரில் வெல்லுதல் எமக் கியலாது.' எனத்தேர்ந்து போர்புரிதற்கஞ்சிக்கண்ணிமைத்து நின்ற வேந்தரை வள்ளல் நோக்கி, 'நீவிர் மரந்தொறும் பிணித்த களிறும், புலந்தொறும் பரப்பிய தேரும் உடையீராயினும், உம்மை அஞ்சுவனோ? பனங்காட்டு நரிக்குச் சரசரப் புக் காட்டி ஆவதென்? கோடி எலிகள் கூடிக் கடலெனா முழங்கி எதிர்த்திடினும், ஒரு நாகம் உயிர்த்தபோது, அவை, பஞ்சு படு பாடுபடு மன்றோ? காகம்பல கூடி நின்றாலும், ஒரு கல்லின் முன் எதிர் நிற்குமோ? பொரும் வலி இழந்திட்ட நும்மீது அம்பு தொடுக்கிலன்; இன்று போய் நாளை வம்

மின்; உயிர்ப்பரிசு கொடுக்கின்றேன் ஓடி உய்ம்மின்' என்று ரைத்து, வேந்தரை ஓட்டிப் புறங்காட்டி, வாகை மிலேந்தனன்.

புறந்தந்தோடிய மூவேந்தரும் ஓரிடத்து மீட்டுங் கூடியி ருந்து சிந்திப்பாராயினர். 'ஒன்றைச் செய்ய வேண்டுவோன், தான் செய்யக் கருதிய வினைவலியையும், அதனைச் செய்து முடிக்குந் தன்வலியையும், அதனை விலக்க முயலும் மாற்றான் வலியையும், அம்மாற்றலர்க்கும் தனக்கும் துணையாவார் வலி யையும் சீர்தூக்கித், தன்வலி மிகுமாயின், அவ்வினையைச் செய்க' என்பர் பெரியோர். அதனை மறந்து, தம்வலியின் அளவறியாதே, தம்மின் வலியாரோடு போர்புரியத் தொடா ங்கி, அது செய்து முடிக்கப்பெறாது, இடையில் கெட்டாருள் யாமும் ஒருவராயினேம். உயிர்க்கு இறுதியாய் முடியும் என் பதை நாடாது, அளவினைக் கடந்து, கொம்பர் நுனிக்கண் ஏறி நின்றார் கெடுமாறுபோல, அளவின்றி எழுந்த நம் ஊக் கம் நமதுகேட்டிற்குக் காரணமாய் முடிந்தது.

பாரி ஒருவனே எதிர்த்து நின்றான்; அவனுக்காற்றாது நாம் எல்லோரும் ஓடி வந்தமையின் உயிர் பிழைத்தோம். ஆ! ஆ!! இவன் வீரமே வீரம்; இன்னவன் வீரத்தின் முன்னர் நம் வீரமெல்லாம், கதிரவன் முன்னர்க் கரவீரமே. இவன தீரமே தீரம்; அதற்குமுன் நம்மவையெல்லாம், நீரால் அறப்புற்ற நதித்தீரமே; இவனே அரசு; இவற் கெதிரில் நாம் யாரும் பூவரசே; படையென்பது இவன் படையே; நம் படைகள் எல்லாம் கற்றரையை உழுதிட்ட அலப்படையே; இவன் கட்டியதே கழல்; நாம் புனைந்தவை யெல்லாம் மங் கையர் பயிலும் கழலே; அரண் எனப்படுவது இவ னது அரணே; நம் அரண் எல்லாம் தினைப்புனத்திற் பரணே.' எனத் தம்மைத்தாமே இகழ்ந்துரைத்து, 'அடாது

செய்தவர் படாது படுவர்' என்பது எமக்கே கைகூடிற்று என்றிரங்கித் தமக் குண்டாகிய பழியை நினைத்து, மாரிநாட் குயில்போல மனம் புழுங்கி யிருந்தனர்.

இவ்வண்ணம் சில பகல் கழியப், பின்னொரு நாள் வேந்தர் மூவரும், பொய்யடிமை யில்லாத புலவர் கூறியவாறு செய்வதே தக்கதெனச் சூழ்ந்து, பரிசின் மாக்களாகத் தமது உருமாறிக் கொண்டு, இரவலர்க்குத் தடையிலாத பாரியின் நகர வாயிலைக் கடந்து, அவனை எதிர்ப்பட்டு நின்று, 'வரையாது கொடுக்கும் வள்ளால்! குடிகளுக்கு நிழன்ற கோலையும் அரசர்க் கழன்ற வேலையு முடையோய்! நாடா வளந்தரும் நாடென்பது நின்னுடே; அரசெனப்படுவது நினதே. பெரும! நின்னை இகழ்பவர் எருத்த மடங்க நின்புகழ் பாடும் பரிசிலர் யாங்கள்.' எனத் தமிழ் புனைந்து பாடினர்.

பாடிய அளவில், யாழிசை கேட்ட அசுணமென, மன மகிழுற்ற பாரி, 'பரிசிலர்காள்! அணுகவம்மின் அணுகவம்மின் என அழைத்து, என்பும் நெகிழுமாறு இனிதாக நோக்கிப் பல்வகைத்தாய முகமன் கூறி, வழிவந்த வருத்த மாற்றிக், கொட்டைக்கரைய பட்டுடையும், கொடுஞ்சு நெடுந்தேரும், மாசறு பொன்னும் மணியும் வயிரமும், பிடியொடு வேழமும் பிறவும் நல்கினான்.

இத்துணை நல்கியும் என்? தாம் உள்ளிய பரிசிலைக் கொள்ளப்பெறுமையின், ஏனையவைகளைப் பெற்றும், ஒன்றும் பெறுதார் போலக் குறையோடு நின்றனர் மூவரும். இரத்தலே யன்றி, இரந்தவர் இன்முகங் காணுமளவும் ஈதலும் இன்னுதன்றோ? இவர்களின் இன்முகம் காணுமாறு யாங்ஙனம்? எனப் பலபடக் கருதினான். கரவடந்தாங்கி இரவலராக வந்த புரவலரைக் கடைக்கணித்து, நீவிர் வெஃகிய

தனை யொளிக்கா துரைத்திடுமின், என்றனன். அரத்தையும் அருளையுங் கையகன்று, அழுக்காறும் உட்பகையும் பூண்டிருந்த அவரும், 'வள்ளியர் தலைவ! யாங்கள் நின்னையே பரிசிலாகப் பெற வந்தோம். இது கைகூடின், எம் குறை நிரம்பும்' என்றனர்.

அதனைக் கேட்ட பொழுதே, வாட்டம் ஒழிந்து முக மலர்ந்தனன் வள்ளல். யான் செய்ததே நல்லறம் போலும் என்றனன். இவர்கள் எதனைக் கேட்பரோ என்று ஏக்குற்றிருந்தேன். என்னிடத்துள்ளதையே விரும்பி, என் பெயரை உண்மையாக்கினர். இருமையும் பயக்கும் நல்லறத்தையும், என்றும் அழியாப் புகழையும் எனக்கீந்த இன்னோரினும் என்னுயிர்க்கு உறுதி தேடினோர் எவர்? ஒருவருமில்லை என, உன்னுந்தோறும் உள்ள மகிழ்ந்தான், உடல் பூரித்தான்.

'பரிசிலர் இரப்பின் வாரே னென்னேன் அவர் வரைப் பினனாகும்.' பாரி, 'மற்றோர்,

விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்'களில் ஒருவனாதலால்,

நாய் நரிகள் நமதென்னவும், தாய் தந்தையர் தமதெனவும், பேயும் பிணியும் எமதெனவும், நமன் தனதெனவும் மதிக்கும் பெற்றியே போல், நாமும் நமதெனக் கருதும் யாக்கை யாரது? இது, செந்நீர் கொண்டு, இறைச்சியாற் சுவரெடுத்து கால்கொண் டெழுப்பி, இருகை நாற்றி, வளைமுது கோட்டி, எற்புக்கழி நிறைத்து, நரப்புக்கயிறார்த்து, தோலால் மூடி, ஐயும், பித்தும், மலம், நீரும், புழுவும், குடரும் என்றிவை நிறைத்து வைத்த முடைக்குரம்பை; ஒழியாது இழியும் ஒன்

பது வாயிற் பொள்ளல் புலைக்குடம்; பைம்மறியா நோக்கப் பருந்தார்க்கும் தகைமைத்து; இதனது அருவருக்குந் தன்மையைப் பிறர் அறியாமல் மறைப்பதற்கன்றோ, பூவே, சாந்தே, எண்ணெயே, அணிகலமே, ஆடையே என்றிவற்றாற் புனைந்து கொள்வது? அன்றியும்,

> "வினையின் வந்தது வினைக்கு விளைவாவது
> புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
> மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
> பற்றின் பற்றிடங் குற்றக் கோள்கலம்
> புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
> யவலக் கவலை கையா றழுங்கல்
> தவலா வுள்ளந் தன்பா லுடையது
> மக்கள் யாக்கை."

இவ்வுண்மையை அறிந்த பின்னும் இவ்வுடம்பினை எவரே சுமக்கலாற்றுவார்? முற்கணத்து மணமகனாக இருந்தவன் பிற்கணத்துப் பிணமகனாய், மணப்பறையே பிணப்பறையாய்க் கழிதலால், யாக்கையைப் புன்னுனிமேல் நீரும், நீர்மேல் எழுத்தும் எனச் சொல்லவும் வேண்டுமோ? நிலையாமைக்கு நிலைக்களமாகிய இவ்வுடலைப் பொருட்படுத்துவனேல், புகழுடம்பு எங்ஙனம் கைவந்துறும்? இவற்றை எல்லாம் நன்குணர்ந்தன்றோ, தன்னகம் புக்க குறுநடைப்புறவின் தபுதி கண்டஞ்சித் துலை புக்கனன் சிபி மன்னன்; தன்னை வந்திரந்த இந்திரனுக்குத் தன் முதுகென்பைத் தந்துதவினர் ததீசி முனிவரர். இவ்வனைத்தையும் சீர் தூக்கு மிடத்து, 'இவ்வுலகின் மன்னுதல் வேண்டின் இசை நடுக' என்னும் முதுரையைக் கைக்கொண்டோர், பொருளானே யன்றித் தம்

உடம்பாலும் பிறர்க்கு உரியராதல் வேண்டும் என்பது தெற்றென விளங்க வில்லையா?

செல்வம் பெருக்காற்றையும், இளமை அதன் இடிகரையையும், வாழ்நாள் அவ்விடிகரை வாழ் மரத்தையும் ஒத்திருத்தலால், ஒன்றே செய்யவும், ஒன்றும் நன்றே செய்யவும் நன்றும் இன்றே செய்யவும், இன்றும் இன்னே செய்யவும் வேண்டும் என்பர் பெரியோர். ஆதலால், இனிஇடையீடின்றி, இவர்களின் உள்ளக்குறிப்பின் வழி நின்று, வாய்மையைக் காப்பேன்' எனத்தன்னுயிரைத் துரும்பென நினைத்து, இன்னவரை அணுகி, 'யான், இன்னே நும் பரிசிலாயினேன்; என்னைக்கொண்டு சென்று, உமது குறை தீர்ந்து இன்புற்று வாழ்ந்திருமின்' என்றுரைத்து மலர்ந்த முகத்துடன் அவர் பக்கம் நின்றான்.

இவ்வுரை கேட்ட மூவரும் வாட்டம் ஒழிந்தனர். வலனைத் தன் சூழ்ச்சியின் அகப்படுத்திய வானவர்க் கரசனைப் போல், களிப்பென்னும் கடலில் ஆழ்ந்தனர். தம் அரிய சூழ்ச்சியைப் பாராட்டிப் புகழ்ந்தனர். மறை நூலிற்றடையுண்ட வேழமென, வாய்மையாற் கட்டுண்ட வள்ளலை, மிடியர் பெற்ற பொற்கிழிபோற், போற்றிச் சென்று, கொலைவல்லான் கையிற் கொடுத்துத் தம் எண்ணத்தை முடித்துக் கொள்வாராயினர்.

வரையாது கொடுக்கும் வள்ளல், மண்மடந்தை துயர்கூர, இரவலர் ஏங்கப் புரவலர் மகிழ, விண்ணக மாதர் விழைந் தெதிர்தழுவ புலவர் பூமாரி பொழிய, தேவவுடம்போடு வானவூர்தி இவர்ந்து பொன்னுல கடைந்தனன். ஊழ்வினை தானே உருத்துவந்து பயனூட்டப் புகுமே

னின் இடைநின்று அதனை வாராமற் றடுக்க யாரான் முடியும்?

V.

இங்ஙனம் தன்னுயிர்த் துணைவன், சூழ்ச்சி வலையிற் சிக்கி, இரவலர் கைப்பட்ட பின்னர்த், தனித்திருந்து உயிர் வாழமாட்டாத பறம்பிற் கோமாட்டி தன்னுயிர்ப் பாங்கி ஒருத்தியை நோக்கி "அன்னாய்! என் காதலர் வஞ்சம் அறியாத நெஞ்சினர்; பகைவர் சூழ்ச்சி யறியாது அவர் கையகப்பட்டனர்; யாதாயினரோ தெரிந்திலேன்! இது காறும் காணப் பெறாமையின், நெஞ்சு கலங்கி நோய் மிகா நின்றது; ஆண்களுக்கு வலப்புறமும், பெண்களுக்கு இடப்பக்கமும் துடிக்கின் நன்மை பயக்கும் என்ப. என் வலத்தோளும் வலக்கண்ணும் துடிக்கின்றனவே. யாது தீங்கு வந்துறுமோ? நங்காய்! என் செய்கிற்பேன்!" என நெருப்பென நெட்டுயிர்த்துப், பலவாறு பிதற்றித், தன்னை மறந்து கிடந்தாட்குக் கண்ணுறக்கம் வந்தது. அயர்ந்து தூங்குபவள்,

எயிறு வீழவும் எண்ணெ யாடவும்
கோடி யுடுக்கவும் கோதை களையவும்
மங்கலம் பெருகி மாநிலத்து வீழவும்

கனாக்கண்டு, திடுக்கிட்டெழுந்து, இத்தீக்கனா யாது விளைவிக்குமோ? கடவுளே! எனப் பெரிதும் ஏக்குற்று, மத்தங்காய் உண்டவர் போல மதிமயங்கி இருக்கையில், ஒற்றனொருவன், தலைவிரிகோலமாய் குடலறுபட விரைவிற் போந்து, வீழ்ந்து வணங்கி, கண்ணீரால் அடி விளக்கி, உடல் நடுக்குற, கண்டம் விம்ம, நாத்தழுதழுப்ப எழுந்து நின்றனன். அவன் நிலையைக் கண்ணுற்ற நங்கைக்கு முன்னையினும் மனக்கலக்கம் பெரிதாயிற்று.

'ஒற்ற ! என்னுற்றது ? அஞ்சாதுரைத்தி' என்றனள். அவனும், 'அன்னையே ! என்னுறைப்பேன் ? நின் காதலன்— நின்காதலன்—என்றுரைத்திட்டு, மேலே நாவெழாமையால் ஒன்றும் சொல்வதற் கியலாது, ஓ வென்று கதறினன். பின்னர், ஒருவாறு தன் நெஞ்சத்தைத் தேற்றிக்கொண்டு, 'நின் கணவன் பழியைப் பகைவர்க் களித்துப், புலாலுடம்பை மண்மகட் கீத்துப், புகழுடம்போடு வான்போகலாயினர்.' என்றுரைப்பதன் முன், நங்கை இடியொலி கேட்ட பாம்பெனத் துடிதுடித்து, அடியற்ற மரமெனப் படிமிசைத் திடீரென வீழ்ந்து, அம்பேறுண்ட மயில்போல வருந்திக், கனலை நுங்கினுரெனச் சோர்வுற்றுச் சிறிது நல்லுணர்ச்சி தலைக் கூடியபோது வயிற்றைப் பிசைந்து கொண்டு, 'பரம்பிற் கோமானே! பாரி மன்னனே! வாயார வாழ்த்தினோர்க்குக் கையாரக் கொடுக்கும் வள்ளால்! அந்நாளில், அழற்கடவுள் சான்றாக மங்கள நாண்பூட்டி என்னைக் கைப்பற்றிய காலத்து, இனி எந்நாளும் பிரியேன் என்று இசைத்தனையே, வேளிர் தலைவனே! அவ்வாய்மையை மறந்து, என்னைத் தனியே யிருந்து தவிக்கவிட்டேகல் முறையோ? என் கணவா! என் செய்வேன் ! அந்தோ !

"பாரேல்லாம் போற்றப் பறம்பாண்டா யெம்பெருமான்
நேரலர்சூழ்ச் சியிற்பட்டு நீ மறந்தேங் கேகினையோ
பாரா தொருமொழியும் பகரா திரக்கவுநான்
வாராத வூர்க்கோ வழிக்கொண்டாய் எம்பெருமான்
உன்னைப் பொருளா வுயிர்வாழ் வறிந்திருந்தும்
என்னைப் பிரியமன மெவ்வா றிசைந்தனையோ!"

என வாய்விட்டுப் புலம்பினள். நகரமுழுவதும், யாழ் ஒலி யும் முரசொலியும், முழவொலியும் வாயடங்க, அழுகை ஒலி

யே மிகுவதாயிற்று. பாரியின் பிரியாநட்பினராகிய கபிலரும் அருமை மகளிரும் ஆராத் துயரில் அழுங்குவாராயினர்.

அன்னகாலையில், எவர் என்ன சொல்லித் தேற்றவும் ஆற்ருளாகிய பாரியின் மனையாட்டி, 'பசைந்தாரிற் றீர்தலின் றீப்புகுதல் நன்று.' இத்துயர்க்குத் தீப்பாய்ந்து உயிர் துறப்பதே தீர்வு, என முடிவு செய்து கொண்டு, தன் கருத்தை மக்கட்குணர்த்தி ஆறுதல் கூறி விடை கேட்டனள்.

அது கேட்ட மக்கள், தம் அன்னையை அணுகி, முகத்தோடு முகம் வைத்து, '.அன்புடை அன்னாய்! என் செய்குவம்! யாங்களோ என்றால், பெண் மக்கள்; பெண் மக்களாவார் ஒருவரிடை வாழ்க்கைப் படுந்துணையும், அவர்கட்கு உற்ற தஞ்சமாவார் பெற்ருேரை யன்றிப் பிறரில்லை என்பதை நீ உணராத தன்றே: எம்முடைய அரும் பெறற் தந்தையை யின்று பறிகொடுத்திட்ட நாங்கள் தந்தையினும் பால் கொடுத்த தாய்க்கே பெண்கள் பால் அன்பு மிகுதி என்பதறிந்து, தந்தை இறந்த அவலம் சிறிது ஆரப்பெற்று, நின்னையே நம்பி இருந்தோம்; 'நம்பினேரை நட்டாற்றிற் கைவிடுவார் போல்,' எம்மைச் சின்னஞ் சிறு வயதில் தன்னந் தனியே தவிக்கவிட்டேகுதற்கு நீயும் மனம் துணிவையாயின், ஆதரவற்ற யாங்கள் எவரைத் துணைகொண்டு உயிர்வாழ்வோம்; தாயே! நீ எம்மைப் போற்றி இங்கிருந்திடுவாய்.' என அடி பணிந்து முகவாயைப் பற்றிக் கொண்டு இரந்து வேண்டினர்.

அவ்வாறு இரந்திட்ட மக்களை அருகிருத்தி, முன்றானையால் கண்ணீர் துடைத்து, "என் அருமந்த மக்காள்! என்னிடத்து வைத்த ஆர்வ மிகுதியால், அறியாதீர் போலச் சில புகல்கின்றீர்; உலகில், உற்ருர், பெற்ருர், உடன் பிறந்

தார், மக்கள் முதலிய வருள், எவர் இறப்பினும், ஆற்றி யிருப்பர் கற்புடைய மகளிர் ; தம் கணவன் இறந்திடின் ஆற் றொணுத் துயரால் அப்பொழுதே உயிர் துறந்திடுவர் ; கற் புடைய மகளிர்க்குக் கணவனை யன்றி உயிர் வேறுள்ளதோ, நினைத்துப்பாருங்கள். என் உயிர்த்துணைவர் இன்று இறந்து பட்டனர் ; உயிர் நீங்கிய பின்னும், உடல் வாழ்ந்திருப்பக் கண்டீராயிற் சொல்லுமின் ; அது மூன்று காலத்தினும் இல்லையே. கணவன் இறந்த பின், கனற் புகுந்து தம் துய ரொழிவர் காரிகையார். தம் துணைவர் இறந்தபோது, நங் கைமார் தீப்புகுதல் புதியதோர் வழக்கன்று. இஃது உறு திப்பட முன்னிகழ்ந்த தொன்றினைக் கூறுமுன், கற்புடை மங்கையர் நீர்மையைச் சிறிதுரைப்பன், கேண்மின்.

' கற்பென்பது மகளிர்க்குச் சிறந்த அறமாகும். அது கொண்டவனிலும் சிறந்த தெய்வம் பிறிதில்லை ; அவனை இவ் வாறு வழிபடுக எனப் பெற்றோரும், அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், கடவுளராகிய இவர்களிடத்து இன்ன வாறு ஒழுகுக எனக் கணவனும் கற்பித்த நெறியிற்றவறாது ஒழுகுவதாம். இக் கற்புடைய மகளிர், தலையன்பு, இடை யன்பு, கடையன்பு என்னும் அன்பின் வேறுபாட்டால் முத் திறப்படுவர். அவருள் தலையாய அன்புடையார் தன்மை யைக் கேண்மின்:—

' கூடன் மாநகரில்' பாண்டியன் ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன், புகார் வணிகன் கோவலனை ஆராயாமற் கொலை செய்வித்தபோது, கோவலன் மனையாள் கண்ணகி அவைக்களமேறி வழக்காடித் தன் காற்சிலம்பு கொண்டு உண்மை உணர்த்த, உணர்ந்த அச்செழியன், ஆராயாமற் காரியஞ் செய்து அரும்பழி பூண்டமைக்கு நெஞ்சுடைந்து,

அரியணை மீது வீழ்ந்து அன்றே உயிர் நீத்தனன். இஃத றிந்த அவன் தேவி, மனக்கலக்கஞ் சிறிதுமின்றி, அப் பொழுதே உயிர்துறந்தனள். இதுவே, தம் கணவன் இறப் பின் தாமும் உடன் சாதலாகிய தலையாய அன்புடையார் தன்மையாகும். இனி இடையாய் அன்பினர் இயல்பு கூறு கின்றேன்.

ஆலவாயின் கண் அரசு புரிந்திருந்த பூதப்பாண்டியன் இறந்தகாலத்து அவனது இல்லக்கிழத்தியாகிய பெருங்கோப் பெண்டு பிரிவாற்றாது வருந்தித், தீப்பாயப் புக்கபோது, பக் கத்திருந்தார் பலரும் விலக்கினர். அவள், அன்னவர்களைத் தீயெழ நோக்கிப்

> "பல்சான் றீரே பல்சான் றீரே
> செல்கெனச் செல்லா தொழிகென விலக்கும்
> பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே"

என இகழ்ச்சி தோன்ற விளித்து, 'நின் தலைவனோடு இறத்தற்கு நீ போ' எனக் கூறாமல், அதனைத் தவிர்க என்று விலக்கிய நீவிர் பொல்லாதவரே; இடுகாட்டின் கண் அமைக்கப்பட்ட விறகடுக்கிய பிணப்படுக்கை உங் கட்கு அரிதாகுக; எம்கொழுநன் இறந்தபின் தாம மரைப் பொய்கையும், தீயும் எமக்கு ஒரு தன்மைத்து எனக் கூறித் தீப்பாய்ந்தனள். இதுவே, தம் கணவர்க்குப் பின் தாம் உயிரோடிராமல், அவரோடு உடன்கட்டை ஏறுவதாகிய இடைப் பட்டாரது செய்கையாம்.'

'கடைப்பட்டார், கையாற் பிழிந்து கொள்ளப்பட்ட நீர்ச்சோற்றுத் திரளை, எள்ளையரைத்த விழுதுடனே புளி கூட்டிச் சமைத்த வேளைக்கீரையோடு உணவாகவுண்டு, பருக்

கைக்கற் பரப்பிய படுக்கைக்கண் பாயுமின்றிக் கிடந்து, கைம்மை நோன்பு நோற்று வருந்துவர். இவர் முற்கூறிய எத்துணைத் தாழ்ந்தவர் கண்டீர்.'

'க்கடைப்பட்டார்போலக் கணவர் இறந்த பின்னும் உயிர் தாங்கி நின்று, மறுபிறப்பில் அவருடன் வாழ்வதற்குக் கைம்மை நோன்பு நோற்று வருந்துவே னல்லேன். என்பொருட்டாக நீவிர் கவலை கொண்டு இனைவதிற் பயனில்லை. இனி, எவர் தடுத்திடினும், யான் என் மன நிலையை மாற்றிடேன்; நான் செல்கின்றேன்; நீங்கள் ஆற்றியிருங்கள்' எனப் பலவாறு சொல்லி, ஒருவாறு தேற்றிக், கபிலர்பால் அன்றேரைக் கையடையாக நல்கி, வணங்கி விடைபெற்று, ஈமப்பள்ளிமிசை இன்னுயிர்த் துணைவனைத் தழீஇக்கிடப்பதாக மனங்கொண்டு, கொழுந்து விட்டெரியும் செந்தீயை வலம் வந்து, தாமரைப் பொய்கையிற் புகும் தனிப் பெடை போல மனமகிழ்ந்து புக்குவிண்ணொடு சென்றனள்.

அதன்பின்னர், அரும்பெறல் நண்பன் பாரியை நீத்து உயிர் வாழ்வதற்கு மனம் பொருந்தாத கபிலர், தம் இருமுது குரவரை யிழந்த துயரத்தால், உடல் மெலிந்து, உள்ள நெக் குருகிக் கண்ணீர் வார அழுது வருந்தும் மகளிரைப் பரிவொடு நோக்கி, "மக்காள்! யாண்டுகள் பல புரண்டழுதாலும் மாண்டார் வருவதில்லை; முடி சார்ந்த மன்னரும், மற்றுமுள்ளோரும் பிடி சாம்பராகுவர்; தோன்றியவை மறைதலும், பிறந்தவர் இறத்தலும் இயற்கை. 'வாழ்வாவது மாயம், அதுமண்ணாவது திண்ணம்' என்னும் முதுமறை. ஆதலால், கழிந்த பொருட்காக வருந்துதல் நம்போல்வார்க்கு அடுத்ததன்று. இனி, ஒரு கணமேனும் இங்கிருத்தல் ஒல்லாது; வாருங்

கள்'' எனக்கூறி, அவரை அழைத்துக்கொண்டு வேறு நாடு செல்லப் புறப்பட்டனர்.

செல்கின்றவர், தம்மைப் பேரன்போடு ஆதரித்துவந்த வள்ளலையும், அவனது அரசிருக்கையாகிய பறம்புமலையையும் நினைக்குந்தோறும் அப்புறம் செல்வதற்கு மனமெழாமல் திரும்புவர்; சற்றுநின்று இரங்கி மனம்நைவர். "பாரி! நீயும் யானும் கொண்ட நட்பிற்கேற்ப யானும் நின்னொடு வருதற்கு மனம் இயையாமல், நீ 'ஈண்டுத் தவிர்க' என என்னை இங்குத் தனியே விட்டேகினையே; நினக்கு யான் மனமொத்த நண்பன் அல்லனோ? நீ எனக்கு வேண்டுமவற்றைச் செய்திருந்த நாட்களில் என்பால் ஏதேனும் வெருப்புண்டோ? மலைகெழுநாட மாவண் பாரி! இப்பிறப்பிற்போல, மறுபிறப்பினும் நின்னோடு கூடிவாழ்தலை விதிகூட்டுவதாக நோற்பேன்'' என்பார்.

"பல்வளஞ்சான்ற பறம்பே; பரிசில்வேண்டிச் சேய்மைக்கண் இருந்து நினைப்பவர் மனத்திற்றோன்றிய நீ, இப்பொழுதுகண்ட காலையிற் கண்ணிற் புலப்படும் ஏனைய மலைகளைப் போலாயினையே! இன்றளவும் நன்குன்றமான நீ, இனிக் கொடுங்குன்றமாயினை; ஆ! ஆ!! மலைக்கும் மடிவு வந்ததே! என்ன வியப்பு!'' என்பர்.

பின்னர்த் தலையிற் கைகூப்பி நின்று, "பிரான்மலை மேவிய பெருமானே! பாரீச்சரமுடைய பரனே! உயிர்கள் செய்யும் நல்வினை தீவினைக்கேற்ற பயனைக் காலமறிந்து ஊட்டவல்ல கடவுளே! என்னுயிர்த்தோழனாகிய பாரி, தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்; தான் பெற்று வைத்த வளம் முழுதும் கற்றவர்க்கே ஈத்துவந்தோன்; தன் அரசிருக்கை யொழிய முந்நூறூர்களையும் பரிசிலர்க்கே கரவாதளித்தோன்; இவ்வாறு யார்க்கும் நன்மையை நாடியிருந்த

இவற்கும் தீங்கு வந்துற்றதே! 'நன்மை விதைத்தால் நன்மை விளையும்' என்னும் மூதுரையும் இவன்பால் பொய் மையாய் முடிந்ததே. செய்தவினை யிருப்பத் தெய்வத்தை நொந்தால் ஆவதென்னை? உயிர்க்குயிராய ஒருவனே! நின் அருட்டிறத்தை அறியவல்லார் யார்?" என்றுரைத்து மனந் தேறித் தன் உயிர்த்தோழனையும் அவனது அரசிருக்கையா கிய பறம்பு மலையையும், அதிற்கோயில் கொண்டருளிய இறை வனையும், அவ்விறைவன் அருள்பெற்ற பாரியின் கொடைத் திறத்தையும் நினைந்து, நைந்துருகிப் பாடிக்கொண்டே, தாம் நெடுநாட் பழகிய பறம்புமலையை அரிதின் நீங்கி, ஓரூரிற் போய் அங்கு ஒரு அயலான் மனையில் ஒரு புறத்தில் தங்கி யிருந்தனர்.

## VI

அன்று நிறைமதி யாதலால், விண்முகட்டில் நின்ற ஒருவன், வெண்சீசு கொண்டு, நானிலம் பொதிந்த இருண் மாசினைத் தூய்மை செய்தல் போலத், திங்கள் தண் கதிர் குறைவற நிரம்பி வெண்ணிலாப் பரப்பித் தோன்றினன். பாற்கடல்போல நிலாவெள்ளம் எங்கும் பரத்தலால் கடலெல் லாம், எந்நகர்க்கும் எழில்பெறத் தீற்றுதற்கு அன்னவன் கூட்டிவைத்த வெண்சுதைக் குழம்பை ஏய்ந்தன; நீர்நிலை கள், சுண்ணம் இழைத்திட்ட வெண்பளிக்குப் பாறை போன்றன; அவற்றில் மலர்ந்த மரைமலர்கள் அப்பாறையிற் செதுக்கிய வள்ளம் ஒத்தன; நிலாப்பரந்த நீண்மறுகுகள், வெண்பனி யுறைந்த மேனாட்டுத் தண்கடலிற் சிலவாயின; அங்குக் கனைத்துச் செல்லும் பரிமாக்கள், விரைந்துயர்ந்தெ ழும் அலையெனத் தயங்கின; கொடியொடு தூங்கிவரும் யானை கள், கூம்புடன் அசைந்து செல்லும் மரக்கலம் போன்றன;

ஆயிடைச் செல்வோர், உடுத்தன வெள்ளுடையாய், உரு நிறம் வெண்ணிறமாய்த் திகழ்தலின், பானிறக் கலிங்கம் உடுத்து மாலைக் காலத்தில் கூலத்தில் உலாவரும் வெண்ணிற மக்களை நிகர்த்தனர்; அம்மறுகை யடுத்துக் கொடிகள் துயல் வரப் பன்னிறக் கண்ணடிச் சாளரம் அமைத்து, நாற்றிசை யுங் காண்வர ஏற்றிய விளக்கொடு நின்ற மாடங்கள், கலங் கரை விளக்கமென இலங்குற்றன; நீரினைக் காலும் நிலாமணி மாடங்கள், வெள்ளருவி இழிதரும் வெற்பென விளங்கின; இந்நிலாத் தோற்றத்தைக் கண்டு மகிழ்ந்து, தத்தம் மனக்கி னியவற்றை உண்டு உடுத்து நிலாமுற்ற மேறிப் பாங்கியர் சூழச் செம்மலர்க் கைந்நோவ அம்மனை யாடியபின், இன் னிசை யாழை இடவயின் தழீஇக்கொண்டு மாடகந்திரித்து, வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்,

“ ஒளியாலுலகீன்றுயிரனைத்து மீன்போற்சேவ்வியுறநோக்கி
அளியால்வளர்க்குமங்கயற்கண் அன்னேகன்னியன்னமே
அளியால்இமவான் திருமகளாய் ஆவியன்னமயில்பூவை
தெளியாமழலைக் கிளிவளர்த்து விளையாட்டயருஞ்செய
[லென்னே ?

வேதமுடிமேல் ஆனந்த உருவாய் நிறைந்து விளையாடும்
மாதராசே முத்தநகை மானே இமய மடமயிலே
மாதரிமவான் தேவிமணிவடந்தோய் மார்புந்தடந்தோளும்
பாதமலர்சேப்புறமிதித்து விளையாட்டயரும்பரிசேன்னே.”

எனப்பாடி மகிழும் இளமகளிர், மலையிடமெல்லாம் ஆரவாரிக்க ஆடிப்பாடி, முருகவேளை வழிபடும் வரையர மகளிரை ஒத்தனர்.

இவை யனைத்தையும் கண்ணுற்ற பாரிமகளிர், தமது திரு விளங்கிய மாநகரமும், உருவமைந்த வாயின் மாடமும்,

செய்குன்றும், இளமரக்காவும், விளையாட்டிடமும் பிறவும் நினைவு கூர்ந்தனர். நினைக்கவே, தந்தையோடிருந்த அந் நாளில் தோற்றிய வெண்ணிலவில், முடிப்பன முடித்து உடுப்பவுடுத்து உண்பன வுண்டு, ஆயவெள்ளம் வழிபட நிலா முற்ற மேறி உவந்து விளையாடியதும், இன்று, இவ்வெண் ணிலாவில், இருமுது குரவரையும், எல்லாச் செல்வத்தையும் இழந்து, தமியராயதும், அறுசுவையுண்டி அன்னையர் ஊட்ட மறுசிகை நீக்கி உண்டதும், அஞ்சடுக்கிய பஞ்சணையில் அரச மாளிகையில் நிலாமணி அறையில் கண்படை கொண்டதும் கனவாக, உண்ண வழியற்றுத் தாதுபரந்த தரையில் கையே அணையாகத் துச்சிலிருந்து துயில் கொள்ளாத பெருந்துயர் உண்டாயிற்று. உண்டாகவே,

> "அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்,
> எந்தையு முடையோம் எங்குன்றும் பிறர்கோளார்
> இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்,
> வென்றெறி முரசின் வேந்தரெங்
> குன்றுங் கொண்டார் யாமெந்தையு மிலமே."

என, மனங்கவன்று பாடி, ஒருபுறமிருந்தனர்.

அப்பொழுது மூத்தவள் இளையவளை நோக்கி, "தங்காய்! உலகியற்கை இருந்தவாறென்னே! அற்றைத்திங்களில் கண் டவர் அழுக்காறு கொள்ளும் அரச செல்வத்திருந்த நாம், இற்றைத் திங்களில் எவரும் இகழ்ந்திடும் ஏழையாயினோம்; அரசரும் ஏமாப்ப வீற்றிருந்த நம்செல்வம் ஆற்றங்கரையின் மரமாயிற்றே; குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்த யாம், இட் டடிநோவ எடுத்தடி கொப்பளிப்ப, நடையான் மெலிந்து இவ் வூரை நண்ணினேம். அறத்தாற்றில் வழங்காதான் ஆக்கம்,

உள்ளது போலக் கெடும் என்பர்; எம்முடைத் தந்தை, நல் வினையான் ஈட்டித் தமக்கென ஒன்றும் வேண்டாது, எவர்க்கும் இல்லை யென்னுமல் ஈத்தளித்த வள்ளல்; உயிர்கட்கு ஊறுபாடுண்டாகுமெனக் கருதிப் பூமியதிர நடவாத புண்ணியர்; இவ்வாறு எல்லாவிதத்தினும் நன்மையையே நாடியிருந்த எந்தைக்கு, இத்தகைய தீங்கு நேரிட்டதே; ஈசன் செயல் இதுவாயின், 'எய்தவன் இருக்க அம்பை நோவாரைப்போலப்' பிறரை நோவதாற் பயன் இல்லை'' எனக் கூறினள்.

அதுகேட்ட தங்கை, ''அக்கா! ஆறிடு மேடும் மடுவும் போல, ஒரு பகலில் உயர்வுற்று, மறுபகலில் தேய்வுறும் தன்மையது செல்வம்; அஃது என்றும் ஒரு தன்மையாய் நிலைத்திராமல், 'செல்வேம்' எனத் தன்னீர்மையைத் தானுணர்த்தவும் உணராமல் நிலையுளதெனக் கருதிப் பேணுகின்றோம்; ஓரிடையும் நிலைபெறுமல் மேலும் கீழுமாக மாறி மாறிச் செல்வதால், இதனைச் சகடக்கால் போல்வ தென்பர் அறிஞர். இச் செல்வத்தின் நீர்மையை உணர்ந்தோர், கழிந்ததற்கு இரங்கலும் இன்மைக்கயர்தலும் செய்யார்; உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா'; இன்பமே பெற்றோரும் துன்பமே யுற்றோரும் எக்காலத்தும் எங்கும் இல்லை; ஆகலால், இவ் இடுக்கணுக்கழியாமல், அற்றகுளத்துக் கொட்டியும் ஆம்பலும்போல, வாழ்வினும் தாழ்வினும் எம்மைவிட்டு நீங்காமல் உடன் உறைபவராகிய புலவர் பெருமானை நிழல் போலப் பின்பற்றி ஒழுகுவதே எமக்கு அடுத்தது'' என இருவரும் ஆற்றியிருந்தனர்.

இவர்கள் இவ்வாறிருப்ப, புலவர் பெருந்தகை நினைக்கின்றார்: 'என்னையும் பாரியையும் கண்டோர், இவர் இருவர்க்

கும், பிசிராந்தையும் கோப்பெருஞ் சோழனும், பொய்கையா ரும் கணைக்காலிரும் பொறையும்போல, உடல் இரண்டே யொழிய, உயிரும் உள்ளமும் அன்பும் ஒன்றே எனப் பாராட் டிக் கூறியதைப் பன்முறையும் கேட்டுணர்வேன். அவருள் பிசிராந்தையார் பிசிரென்னும் ஊரிலிருந்த ஆந்தன் என்பவரது தந்தை. இவர் உறந்தையை ஆண்ட கோப்பெருஞ்சோழ னது நற்குணங்களைக் கேட்டறிந்து, அவன்பாற் பெரிதும் அன்பு பாராட்ட, அதையறிந்த சோழனும் இப்புலவர் நீர்மை தன் மனதிற் கிசைந்திருந்தமையின், அவரிடத்துத் தானும் அன்பு செலுத்தினன். இவ்விருவரும் ஒரு நாட்டினராய்ப் பலகாற் கண்டு பழகிச் சொல்லாடற்கிடமின்றி, அரசன் சோணாட்டினும் புலவர் பாண்டி நாட்டினும், இருந்தாரெனி னும், உணர்ச்சி ஒத்தலாகிய நட்பினைக் கைக்கொண்டிருந்த மையின், சோழன் அரசச் செல்வத்தைக் கைவிட்டு வடக்கி ருந்த காலையில் தாமும் வடக்கிருந்து உயிர் துறந்தனர் பிசி ராந்தையார். இவர் அவனை நேரிற் கண்டார் இல்லை கேட் டறிந்தவரே. ஆயினும், அவனோடு உடனுறைந்து உயிர் நீத் தனர். இதையன்றோ மனமொத்த அன்பென்பது.

இன்னும் பொய்கையாரோடு என்னை ஒப்பிடுதல், மலைக்கு மடுவை ஒப்பிடுவதை ஒக்கும். பொய்கையாரோ வென்றால் தன் நட்பினன், சேரன்கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கண்ணனோடு கழுமல நகரிற் போர்புரிந்து, தோல்வி யுற்றுப் பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறை யிற் கிடந்தபோது, தண்ணீர்தா என்று சிறைக்கோட்டம் காவலரைக்கேட்டு உடனே பெறாது பெயர்த்துப் பெற்றமை யால், நீர் வேட்கைமிக்கு நாப் புலர்ந்தும், அதனை மானத் தால் உண்ணாது கைக்கொண்டிருந்து,

"குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபத
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
யீன்ம ரோவிவ் வுலகத் தானே"

என்னும் செய்யுளைப் பாடித் தன் கருத்தைப் புலப்படுத்தித் துஞ்சுற்றதைக் கண்ட அப்பொழுதே உயிர் துறந்தனர்; யாதோ வென்றால், என்னுயிர்த் தோழன் பாரி இறந்து ஒரு திங்கள் கழிந்தும், இன்றளவும் உண்டுடுத்து இன்புற்றிருக்கிறேன்; இதனால் என்னினும் சிறந்த நண்பன் பாரிக்கு எவருமில்லை என்பது புலனாகும் அன்றோ?

சாவிற்சாதலும், நோவின் நோதலும், பிரிவு நனி யிரங்கலு மன்றே அன்பாளர்க்கு அடுத்த நீர்மை; அன்புடை நண்பன் இறந்ததை அறிந்தும், உண்டுடுத்து வாழும் என்னினும் கொடியன் யார்? பிறர் நகைக்க வாழ்ந்திருந்து பின்னொரு நாள் மாய்வதினும், இன்னே இறந்துபடுதல் நன்று என மதிப்பேனேல், கண்ணுறக்கமின்றி வருந்தும் இவர்,அந்தோ கொழுகொம்பற்ற கொடிபோல்வார்! என்னையே களைகணாகக் கருதியவர்; யானும் இவர்களைக் கைவிடுவேனேல், என்னினும் இவர்க்குத் தீங்கிழைத்தவர் எவர்? முன்னரே நட்புரிமை நாடாது பிறர் நகைக்க உடம்பு சுமந்து திரிகின்றேன். இப்போது, நம்பினோரைக் கைவிடுத்த வன்பழியும் என்னை வந்தடையுமாயின், அதனையும் எவ்வாறு தாங்கவல்லேன்? எவர் என்னைப் புறம்பழிக்கினும் பழித்திடுக! எப்பழி வந்திடினும் வந்தடைக. இவரைத் தக்க கணவனிடை வாழ்க்கைப்

படுத்தி நன்னிலையில் நிறுத்துமளவும், யானும் உயிரோடி ருப்பதே நன்றெனை மனவுறுதி செய்துகொண்டனர்.

## VII

அப்பொழுது, 'வைகறை வந்தது, கண்டுயில் எழுமின்' எனத் துயிலெடைப்பறை முழக்குவார்போலச் சிறைகளை அடித்துக்கொண்டு கோழி கூவிற்று. அவர்களின் மனக்கவலை சிறிது நீங்கிட கிழக்கே வெளுத்தது. நகைமுகம் காட்டித் தாமரை மலர்ந்தன; குளிர்ந்த பனிக்காற்று வீசலுற்றது. பறவைகளும் விலங்குகளும் தத்தம் சேக்கை விட்டெழுந்து களித்தன; செங்கதிரும் வையமேறி வானவீதியில் நடக்க லுற்றனன்.

இரவி எழுமுன் எழுந்து, தம் நாட்கடனை முடித்து, ஒரு மருங்கிருந்த புலவர், தாங்கொணாத் துயரை உள்ளடக்கித் தன்னை வந்தணுகிய மக்களை நோக்கினர். அவர்களின், நாண்மலரை வென்று விளங்கிய முகம், மதியெதிர்ப்பட்ட மரைமலர்போலப், பொலிவழிந்து காணப்பட்டமையின், சிந்திப்பார்:

இயற்கை யறிவொடு செயற்கையறிவும் ஒருங் கெய்திய இவர், பேதைப்பருவம் கடந்து பெதும்பைப் பருவம் வந்துற்றவர்; நன்மை தீமைகளை நாடிக்காணும் முதுக்குறை யுடையவர், உள்ளக் கவலையும் உடம்பின் நோயும் மிகுங்காலம் இரவாதலால், நேற்றிரா முழுவதும் கண்ணுறங்காது, கவலையான் மனம்புழுங்கி உடல் மெலிந்தி ருக்கின்றனர்; இந்நிலைமை எனக்குச் சிறிதும் புலனாகாவண்ணம் அடக்கினரெனினும், 'முன்னம் முகம்போல முன்னு ணர்ப்பதில்' என்பதற்கிணங்க, இவர் ஆற்றொணாத் துயரக் கடலில் ஆழ்ந்திருக்கின்றனர் என்பதை, இன்னோர் முகமே

வெளியாக்கா நின்றது; இனிச்சிறிதும் தாமதமின்றித் தக்க மணாளரைத்தேடி மணம்புரிவித்து, இவர்களை நன்னிலையில் நிறுத்தவேண்டும் எனத் தனக்குள்ளே முடிவு செய்துகொண்டு, 'எனது அரும்பெறன் மக்காள்! நீங்கள் இவ்வாறு கவன்று வருந்துதற்கு என்னுற்றது? நும் தந்தையாகிய பாரி என்னுயிர்த்தோழன்; அவனது அருமை மகளிராகிய உங்களை எனக்கினிய மக்கள் என்பதில் தடையுளதோ? யான் இன்னும் உயிர்தாங்கி யிருப்பதெல்லாம் உங்கள் பொருட்டன்றோ? இவற்றை நன்குணர்ந்த நீங்கள் கவற்சியான் மதிமயங்கி அயர்ச்சியெய்தினீர்போலும்; இனிப் பலபடச் சிந்தியாது கவலைச் சுமையை என் பாலாக்கி ஆற்றியிருங்கள்!' என்றருளினர்.

இவ்வினைத்தையும் கேட்ட பாரிமகளிர், புலவர் பெருமானைக் கைகுவித்து வணங்கி, 'எமக்குற்ற நன்மை தீமைகளைத் தமக்குற்றனவாகக் கருதி மனமுருகி அன்பு பாராட்டலின் தாயும், துன்ப நீங்கி இன்புறு நல்வழியை அறிவுறுத்தலின் தந்தையும், எழுத்தறிவித்து இழிதகைமை நீக்கலின் கணக்காயரும், உயிர்க்குறுதியை நாடுதலின் மூத்தோரும், எம்முடைய சுமையை யெல்லாம் தம்மவாகக் கோடலின் அரசுமாய், ஒருருவின்கண் ஐங்குரவர் நீர்மை தெரிக்கும் எந்தாய்! மக்கள் கடவுளர் நரகர் விலங்கென்னும் நால்வகைப் பிறப்பினுமுள்ள உடம்புகள், இடும்பையாகிய இகல்வாளுக்கு இலக்கானதென்று தெளிந்து, தம்மீது வருந்துன்பத்தை இடுக்கணாகக் கொள்ளார் அறிவுடையோர். அறிவும் ஆற்றலும் இல்லாத பேதையாகிய யாங்கள் அதனை எவ்வாறு வெல்லவல்லேம்? எங்கள் மனமோ, வண்டும் குரங்கும் மின்னும் மீனும்போல நிலையின்றி ஓடும் தன்மையது. பேதைமை

யென்பது மாதர்க்கு அணிகலம் அன்றோ? நுண்ணிய நூல் பல கற்பினும், எமக்கமைந்த பெண்மை யறிவன்றே மிகும். 'உப்பொடு நெய் பால் தயிர் காயம் பெய்தடினும் கைப்பறா பேய்ச்சுரையின் காய்' என்பர். வழுக்கு நிலத்திற் செல்வோர்க்கு ஊன்றுகோல்போல எமக்குக் கிடைத்திட்ட பெரியோய்! சிறியேங்கள் அறியாது பிழை செய்திடினும், பொறுப்பது நும் கடனன்றோ? எனப்பணிந்தனர்.

இவ்வண்ணம் பணிந்த மக்களைப் பரிவோடு இருகையால் எடுத்து, அருகிருத்திப் புறம்நீவி, மக்களே கேண்மின்! ஆண் மக்களாயின், அவரைக் கல்விகேள்விகளிற் சிறந்தோராய் அவையத்து முந்தியிருப்பச் செய்தலும், பெண் மக்களென்றால், அறி வொழுக்கங்களிற் மேம்பட்டவர்க்கு வாழ்க்கைப்படுத்தலும், தந்தையர்க்கு இன்றியமையாத கடனாகும்; பெண்மக்கள் எத்தனைநாள் தம் பெற்றோரால் பாதுகாக்கப் பெறினும், அவர்க்கு உற்றவராவார், அவர் தம் கணவரையல்லது வேறுளரோ? இல்லையே.

முத்தும் பவளமும் மணியும் பொன்னும் கடலினும் கல்லினும் பிறக்கின்றன. அவ்வாறாயினும், தத்தம் பிறப்பிடங்களில் எவ்வித மேம்பாடும் உறாமல், தம்மை ஏற்று அணி பவரிடத்தே பேரழகுறுகின்றன. அலையினும் மலையினும் தோன்றிய அவற்றைக் கொள்ளுதற்கு உரியாரை நாடி இடை நின்று கூட்டும் ஒருவனைப்போல, யானும் உங்கட்குத் தக்க மணாளனைத் தேடி, மணம் புரிவித்து என் கடன் கழிப்பேன் வாருங்கள் என்றழைத்துச் சென்று வச்சிர நாட்டை அடைந்தனர்.

இவ்வச்சிர நாட்டிற்கு மகத நாடு எனவும் மறுபெயருண்டு. இந்நாட்டை விச்சிக்கோன் என்னும் சிற்றரசன்

ஆட்சி புரிந்திருந்தான். கபிலர், இவன்பாற்சென்று, 'அரச! யான் அந்தணன்; அன்றியும் பரிசிலன்; இவரோ, கொல்லை யிற் படர்ந்த முல்லைக்கொடிக்கு, எல்லையில் நல்லருள் சுரந்து, தன் மணி நெடுந்தேரைக் கொடுத்த கோமான் பாரியின் மகளிர்; நீ இவரை மணம்புரிந்திட வேண்டுமென்பதே என் குறையாகும்; இதனை மறுது முடிப்பது நின் கடனாகும்' எனப் பாடி வேண்டினார்.

வேண்டினோர் குறையை மறுமல் முடிப்பது வேந்தர்க்கு அடுத்தது எனினும்,யாது கருதியோ, விச்சிக்கோன் மறுத்த னன். உடனே, கபிலர், அவனை நோக்கி, 'அரசே! வேண் டினோர்க்கு வேண்டி யாங்குகொடுக்கும் வேளிர்குலத்தில் வந் தவனென உன்னை இரந்திட்டேன். நீ,புலவர்கள் தன்பால்வரா மல் வாயிற் கதவடைத்து வந்த நன்னன் வழியில்வந்தவன் ; அவன் அத்தகைய அடாத காரியத்தைச் செய்து ஒழுகுதலை உணர்ந்த தமிழ் மூதாட்டியாகிய ஔவையார், அவனுக்குரிய பல்குன்றக் கோட்டம் என்னும் ஏழிற்குன்ற நாட்டை யடைந்து, எவ்வாறோ தடைகளைக் கடந்து, அவனைப்புகழ்ந்து பாடவும்,இவரது அருமை பெருமைகளை அறிந்து வழிபடாது வாளா இருந்தனன். அவன் செய்கையைப் பொறுத ஔவை யார், 'பல்குன்ற நாடுடையோய்! எம்மை இகழ்ந்து பழிதே டிய நீ, எம்மை இகழாது புகழ்தேடிக்கொண்ட வள்ளல் எழு வருள் ஒருவனல்லை. பொற்கலத்தில் வார்த்தற்குரிய பாலைக் கமரில் சொரிந்ததுபோல் பாட்டின் பயனறியாத அறிவிலி யாகிய நின்னைப் புகழ்ந்து பாடினேன். நீ குருடனல்லை; ஆனல் புலவர் புகழ்ந்துரைக்கும் பாட்டும் உரையும் கேட்டுப் பயின்றறியாத ஓட்டைச் செவியுடையை; இதுவே நின் குறை' என முனிவுற்று,

" இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம்—பொருடேரும்
பாட்டு முறையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள." என இகழ்ந்து

பாடிச்சென்றனர். அதுதொட்டு நம்மரபினரைப் புலவர் பாடுதலை நீக்கினர். அதனை அறிந்திருந்தும் நின்னை வரையாது பாடிய குற்றம் என்பாலதாக என்னை யறியாத நின்னை நொந்து ஆவதென்னை? ஒன்றுமில்லை.

அன்றியும், 'பெண்ணென்றாற் பேயும் இரங்கும்' என்று நினைத்து நின்பாற் குறையிரந்திட்டேன்; பெண்கொலைபுரிந்த கொடியனாகிய நன்னன் மரபினனாகிய உனக்குப் பெண்கள்பால் மனமிரங்குமோ? அவன், தான் தின்னுதற்கென்று, இளமரக் காவில் வைத்து வளர்த்த மாவின் செங்காயொன்று, அச்சோலைக்கு அருகில் ஓடும் ஆற்றில் விழுந்து, அயலிலிருந்த துறையில் ஒதுங்கிற்று; அங்கு நீராடச் சென்றிருந்த ஓர் இளம்பெண் ஒதுங்கிக்கிடந்த அக்காயை அறியாது எடுத்துத் தின்றனள். அச் செய்தியைச் சோலை காப்போர் உணர்த்த உணர்ந்து தான் தின்றற்குரிய காயை அப்பெண் எடுத்துண்டது உய்தியில் குற்றமாகக் கருதிப் பெருஞ் சினங்கொண்டு அவளைக் கொலை செய்யும்படிக் கட்டளையிட்டனன். அதனை அறிந்த அப்பெண்ணின் தந்தை, தன்மகட்கு நேர்ந்த தீங்கை எண்ணி, மனங்கலங்கி, நன்னனை அணுகி,'அண்ணலே! என் மகள் நினக்குரிய காயெனத்தெரியாது தின்றனள்; அறியாமற் செய்த பிழையைப் பொறுத்தருள்க; அவள் செய்த குற்றத்திற்காக எண்பத்தொரு யானைகளையும், அவள் நிறையினதான பொன்னாற் செய்த பாவையையும் ஈடாகத் தரவல்லேன்; என் மகட்கு விதித்த கொலைத் தண்டத்தை நீக்கியருள்' என

வேண்டியும் கேளானாய், நெஞ்சில் இரக்கம் சிறிதுமின்றி, அன்னவளைக் கொலை புரிந்தே சினந்தணிந்து, பெரும்பழி பூண்டு, நிரயத்திற் காளானான்.

இதனை என் தோழராகிய பரணர்,

"மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றோ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ வன்னை"

எனக் கூறுமாற்றானறிக. அக் கொடுங்கோலன் வழித்தோன்றிய உனக்கு இரக்கம் எவ்வாறு உண்டாகும்? 'விதையொன்று போட்டால், சுரை ஒன்று முளைக்குமா?' ஆதலால் நின்மரபிற் கடுத்ததே செய்தனை. நின்னை நோவதிற் பயனில்லை" என விச்சிக்கோனை இகழ்ந்து, அவன் நகரை அப்பொழுதே அகன்று, கடுஞ்சுரமும் கான்யாறும் பிறவும் கடந்துபோய், அரைய நகரை அடைவாராயினர்.

அங்கு அடைந்த பின்னர், சங்கவை, அந்தணர் பெருமான் கபிலரை நோக்கி, 'ஐய! பல்வளஞ் செறிந்து விளங்கும் இந்நகரின் பெயர் யாது? இதனைப் புரக்கும் ஆண்டகை யார்? அவன் பிறப்பால் மேம்பட நோன்பியற்றிய குடியாது? இவற்றை நன்குணர்த்தி யருளவேண்டும்' எனப் புலவர் கூறலுற்றனர்.

"சிற்றரையம் பேரரையம் என்னும் இரு கூற்றினையுடைய அரையம் என்பது இந்நகரின் பெயர். இந்நகரை ஆள்பவன் இருங்கோவேள். இவன், துவராபதியினின்றும்

இங்குவந்து, நாற்பத் தொன்பது தலைமுறையாகத் தென்னு டாண்ட வேளிர் மரபில் வந்தவன். ஒருநாள் வேட்டமாடச் சென்ற போது, அங்குக் காட்டில் தவஞ் செய்திருந்த ஓர் முனிவரர், தம்மேற் பாயவந்த புலியைக்கண்டு நடுக் குற்று, 'அரசே! இப்புலியைக் கொல்க' என்ற ஆணை யைத் தலைமேற் கொண்டு, அப்புலியைத் தன் அம்பால் எய்து வீழ்த்திய காரணத்தால் 'புலிகடியால்' எனச் சிறப்புப் பெயர் பெற்றவன். அன்றியும், சிறந்த கொடையாளி" என்று சொல்லிக்கொண்டே, அவர்களோடு போய், இருங்கோவேள் நகரவாயிலை அடைந்து, 'எம் வரவு நும் அரசர்க்குணர்த்துக' என்று வாயில்காப்போர்க்கு அறிவித்தனர்.

கடைகாப்பாளர் கடிது சென்று அவைக்களம் புக்கு, வேந்தன் அடிகளில் தாழ்ந்தெழுந்து, 'வேந்தே! கபிலர், கன்னியர் இருவரோடு முன்றிலின்கண் வந்துளார்' என்றளவில், இருங்கோவேள், முன் சென்று வணங்கிப், 'பொய் யடிமையில்லாத புலவர் பெருமானே! அடிகள் நாயேனை நாடி இங்கு எழுந்தருளுதற்கு யான் செய்த நற்றவந்தான் யாதோ? தேவரீரைக் காணப்பெற்ற இந்நாளே, பிறந்ததனு லாய பேறு பெற்ற நன்னாளென நினைக்கின்றேன்' என முக மன் கூற, அத்தாணி மண்டபத்தில் அணைமீது அமர்ந்த புல வர், ஒருகால் மக்களை நோக்குவார், அதன்பின் இருங்கோ வேள் மருங்கு நோக்குவாராயினர்.

இவ்வண்ணம், இருமருங்கும் ஓடியோடிச் சலிக்கும் புல வரது மன நிலையை நாடிக் கண்ட அரையத் தரையன், "எம் பெருமானே! கடைகுழன்று கருகிச் செறிந்த கூந்தலும், வேலென மின்னிச் சேலெனப் பிறழுங் கண்களும், நிலத்தா மரை யென்னச் சேந்த கன்னமும், எட்பூவோடு நட்புக்

கொள்ளும் மூக்கும், கொவ்வைப்பழம் போலச் செவ்விய இதழும், முல்லை அரும்பை மானும் வெள்ளிய பற்களும், திரு மகள் காமுறு பிறநலனுந்தாங்கிப் பூங்கொடிபோல் நிற்கும் இப்பூவைமார் யார்? உருநலமெல்லாம் ஒருங் கெய்திய இவர், மனநலமாகிய மகிழ்ச்சியின்றி, அனலிற் பெய்த அலங்கலென வாடி நிற்பானேன்? இவற்றை உரைத்தருள வேண்டும்" எனப் பணிவோடு கூறினன்.

இவற்றைக் கேட்ட பரணர்தோழர் கூறுவார். "அண்ண லே! இவரை எவரென வினவுவையாயின், இவர்தாம், ஊரெல் லாவற்றையும் இரப்போர்க்கு இல்லையென்னாது ஈந்து, ஏறு தற்கு ஏற்பச்சமைத்த அணியொடும் புரவியோடும் கூடத் தேரை முல்லைக்கு வழங்கிய புகழையுடைய பறம்பிற்குத் தலைவனாகிய பாரியின் மகளிர்; மூவேந்தர் சூழ்ச்சியால் தந் தையும் அன்னவன் பிரிவாற்றாது தாயும் இறந்து பட்டமை யால் வாடி நிற்கின்றனர்; யான் இவர் தந்தையின் தோழ னாதலால், இவர் என்னுடைய மகளிர்; புலவனாகிய யான் அந்தணன்: அந்தணர் கொடுப்ப அரசர் கொள்வதாற் குறை யில்லை; ஆதலால், யான்தர நீ இவரைக் கொள்வாயாக" என்றனர்.

உடனே, இருங்கோவேள் நினைக்கின்றான், 'தாய் தந் தையரை இழந்து, தாங்கொணாத் துயரில் மூழ்கிய இம்மங் கையர், யான் வரைந்து கொள்வதற் கேற்ற குலனும் நலனும் ஒழுக்கமும் உடையரெனினும், முடியுடை வேந்தர்க்குப் பகைவனான பாரியின் மகளிராயிருக்கின்றனர். இவரோ வென்றால், புலனழுக்கற்ற அந்தணர்; அன்றியும், புலவர்; வில்லேருழவர் பகை கொள்ளினும் சொல்லேருழவர் பகை கொள்ளலாகா தென்பர். ஆருமற்ற இன்னவரை அளித்தற்

பொருட்டாக, 'மூத்தோர்சொல் வார்த்தை யமுதம்' எனக் கொண்டு, இவர் சொற்கு உடன் படுவேனாயின், தம் உயிர்க்கு அன்பின்றித் தூங்கு புலியை வாயில் இடறு வாரைப் போல், மூவேந்தரது பகைமையைத் தானே தேடிக் கொண்டதாய் முடியும்; இதற்கு என் செய்குவேன்' என, இருதலைக் கொள்ளியின் எறும்புபோல், இருமருங்கும் ஓடித் துணிவுறாமல் ஓய்ந்திருந்தனன்.

வறிதேயிருந்த இருங்கோவேள் ஒருவாறு மனம் துணிந்தனன். 'வேந்தர்கள் எல்லாவிதத்தும் குறைவற்ற வன்மையுடையவர்; அவர்களைப் பகைக்கின் சீறுவர். 'வேந்தன் சீறின் ஆந்துணையில்லை.' துணையின்றித் தனித்த நான், போர் புரிந்து வெற்றியடைவதும், மானம் அழியாமல் உயிர் வாழ்வதும் முடியாது. 'தாய்க்கு ஒளித்த சூலும், தன்னெஞ்சம் அறியாத வஞ்சகமும் இல்லை.' என் நிலைமையை அறிந்தும் அடாத காரியத்தில் யான் தலையிடுவேனேல் என்னினும் பேதை எவர்? தனியேயிருந்து பலரோடு பகைகொள்பவன் பித்தரினும் பேதையன்றோ? இப்புலவர், சீரொழுகு சான்றோராதலால், சினங்கொள்ளினும் தீங்கு வந்தடையா என மனங்கொண்டு, பெரியோய்! ஏழையேனாகிய தமியேன் யாது உரைக்க வல்லேன்? பாரிக்கும் வேந்தர் மூவர்க்கும் பெரும்பகை என்பது உலகம் அறிந்தது; உலகறிந்த ஒன்றில் அறியாதானைப் போலத் தலையிடுவேனேல், உய்தியில்லாத குற்றத்திற்காளாகி, முடியுடை மன்னர் முனிவுக்கு இரையாதல் திண்ணம். ஆதலால், இக்கன்னியரை வரைந்து கோடலை யொழித்து வேறு யாது சொல்லினும் மறாது செய்கிற்பேன்; செந்தண்மை பூண்டொழுகும் அந்தணீர்! நும் போல்வார் என்னை இத்தகைய துன்பத்

திற் காளாக்குதல் தக்கதோ? என மனம் உளையக் கூறினன்.

அன்னகாலையில், அருந்தமிழ்ப் புலவர்க்குக் கோபம் பிறந்தது. கையொடு கையைப் புடைத்துச், சுட்டு விரலை மூக்கிற் சேர்த்து, தீப்பொறி பறக்க இருங்கோவேளை ஏறெடுத்துப் பார்த்தனர். பார்க்கவே என் செய்குவான் வேளிர் தலைவன்? உள்ளம் வெருவினன் உடலம் வெயர்த்தது; நெஞ்சு பறையடிக்க, நாத்தழுதழுப்பக் கண்கள் இருண்டன; கைகள் பிசைதலுற்றன; கால் தள்ளாடிப் பனித்தன; இடியொலி கேட்ட அரவமென நடுநடுங்கித் தியக்கமுற்று ஒன்றுந் தோன்றாதவனானன்.

இவன் இவ்வாறிருக்க, இவனது முகத்தை உற்று நோக்கிய கபிலரது சினம் நீர்கிழிய எய்த வடுப்போல, ஒருநொடியும் நில்லாது நீங்கிற்று; அன்பும் அருளும் தம்மின் முந்துவவாயின; இனிது நோக்கி இன்மொழி கூறித் தேற்றினார்.

வான் துளிவீழக் கண்ட வானம்பாடி போல மனந்தளிர்ப்பெய்திய இருங்கோவேள்,

"சிறியவர் ஒருபிழை செய்யின், மேலவர்
பொறையொடு பின்னரும் போற்ற லல்லதை,
இறையதும் வெகுள்வரோ? யானும் செய்பிழை
அறிவனீ யன்றியே யார தாற்றுவார்?" எனக் கூறிப் பணிந்தனன்.

உடனே, புலவர் பெருந்தகை அரைபத்திற் கரையனை நோக்கி, "அரசே! நின் கோழைத்தனம் இருந்தவாறென்னே? வேந்தர் மூவரேயன்றி, இன்னும் எத்துணை பேர் எதிர்வந்து போர்புரியினும், என்செய வல்லார்? பொன்னம் பெரிய மலைகளெல்லாம் தகர்படுவது கூடத்தினலா? இல்

லையே. சிற்றுளியாலன்றோ தகர்படுகின்றன. நீ, பேராற்ற லுடையோராகக் கருதிய மன்னர் மூவரும் பறம்பரணை முற்றியிருந்தபோது. அவர்களை எதிர்த்துப் போர்புரிந்தவர் எத்துணைபேர்? பாரியை அன்றி வேறுண்டோ? ஆராய்ந்து பார்ப்பாய். அவ்வாறாயினும், அவரைப் புறங்காட்டினோன் பாரிதானே; அவன் வெற்றிக்கேது, அவனது அஞ்சாத நெஞ்சமோ அன்றிப் படைகளோ சொல்வாய். இவ்வாறாக நீ ஏன் அஞ்சுகின்றனை? அஞ்சாத ஆண்மை ஆயிரம் துணை வர்க்கு ஈடன்றோ? பொச்சாப்புடையார் பொருட்செல்வம் பெறினும், பயனுறாவாறு போல, அச்சமுடையவர், காடு மலை முதலிய அரண்களுக்குள் படைஞர் காப்ப இருப்பினும், அவைகளாலாகிய பயனை எய்தப் பெறார்.

இன்னும் அச்சம் எத்தன்மையது எனின், அதையக் கேள். அச்சம் அரணத்தை மோர்கல்லும் கொடாரி; இன் னுலுக்கு ஈன்றதாய்; நிந்தையை நேர்ந்தழைக்கும் தூது; ஆண்மைக்கு அரும் பகை; ஆற்றலுக்கு அரம்; பகைவர்க் குப் பாங்கன்; ஆதலால், அச்சத்தை அறவே விடுத்து, யான் சொல்வதைக் கேள். இரத்தல் அரிது, ஈதல் யார்க்கும் எளிது. யார்க்கெனினும் ஓர் உதவி தன்னால் முடிவதெனின், அவர் உரைப்பதன்முன், அதனைத் தாமே குறிப்பறிந்து, முடிப்பர் தலையாயார்; சொல்லினும், பன்னாள் மறுத்துப் பின் னொரு நாளிற்செய்வது கடையாயர் தன்மை என்பர்."

"இஃதன்றி, ஒருவர் ஏதேனும் ஓர் குறையால் இட ரற்றனராயின், அதனை முடித்தலால் தமக்கு எவ்வருத்தம் வரினும் பாரார்; எப்பொருளும் வெஃகிடார்; அதனால் தம் உயிர் போக நேரினும், அதனையும் ஒரு பொருட்படுத்தார்; எதனையும் இனிதென மகிழுவர் வீரர். இஃது இவ்வாறாக,

என்னே நின்மருட்சி? மருண்டு நோக்கினார்க்கு இருண்ட விடமெல்லாம் பேயை யன்றி வேறு தோன்றுமோ? இவற்றை எல்லாம் நன்கு ஆராய்ந்து பார். என் சொல் மறாது இவளை மணந்து இன்புற்று வாழ்க" எனப் பின்னரும் புகல்வாராயினர்.

இவைகளைக் கேட்ட அரையத்து மன்னன், இடையன் வெட்டின மரம்போல, ஒன்றினும் துணிவு பெறாத உள்ளத்தனாய், நெடுநேரமளவும் பேச்சுமாடாது உயிர்த்தலும் செய்யாது, எழுதிய ஓவியம் என இருந்து, சிறிது துணிவெய்திய பின்னர், கபிலரை நோக்கி, "முத்தமிழ்த் துறைபோகிய முனைவரே! தினையளவும் கள்ளமற்ற பளிங்குபோன்ற யான், உள்ளதை உள்ளவாறுரைக்கின்றேன்; உண்ணீர்த் துறையில் பரந்து கிடக்கும் பாசி, நீர்வேட்கை யுற்றார் சென்று தம் கையால் தொட்டபோது நீங்கியும், விட்டபோது முன்போலச் செறிதலும் இயற்கை. அதுபோல், எம்பெருமான்! நின் அருமை பெருமை வாய்ந்த கட்டுரையைக் கேட்குமளவும், ஒருப்பாடெய்தித் தெளிவுற்றும், அதன்பின் ஆற்றலின்றி ஐயுற்றும் மயங்குகின்றது என் கோழை நெஞ்சம்; யாது செய்கிற்பேன்" என்றனன்.

உடனே கபிலர் சிந்திப்பார்:—"பொள்ளற் குடத்தில் வார்த்த தெள்ளமுதும், விழலுக்கு இறைத்த நீரும் எக்காலத்தேனும் பயனடைந்த துண்டோ? அன்றியும் விதைத்தாலும் நாறாத வித்தும், பூத்தாலும் காயாத மரமும் உலகில் உண்டு. அஃதே போல், இப்பேதைபால் என் சொற்கள் நலம்பெறாவாயின. செய்த வினை யிருக்க இவனை நொந்து ஆவதென்?" என நீடு நினைந்து, இருங்கோவேளைப் பார்த்து, 'அரசே! புலிக்குத் தன் காடென்பதும் பிறர் காடென்பதும்

இல்லை. அதனை உன்பால் காண்கின்றேன். நீ, நின்னைப் பளிங்குபோல, வெள்ளை எனக் கூறிக்கொண்டனை. பளிங்கோ என்றால், சார்ந்ததன் வண்ணமாயிருப்பது. நீ, ஆடியிற் பாவைபோலத், தனக்கென ஒன்றுமில்லாதவன். ஆதலால், நின்பால் கூறுதற்கோர் குறையில்லை. நின் தன்மையை நன்கு ஆராயாமல், நின்னிடத்து வந்து இதுகாறும் இருந்திட்ட யானே பிழையுடையேன். இது கிடக்க ஒன்று கூறுவேன் கேட்பாய்; நம் முன்னோரில் ஒருவன், கன்னைப் புகழ்ந்து பாடிய கழா அத்தலையார் என்னும் புலவரை இகழ்ந்ததன் பய னாகத் தன் நகரமாகிய அரையம் அழிவெய்தப் பெற்றனன். அதனை நினக்கு இன்று நினைப்பூட்டுகின்றேன். தெள்ளிதின் ஆய்ந்து பார், 'யானும் ஒரு புலவன்; என் செய்யுளை இகழ்ந் திட்டனை; யான் செல்கின்றேன்; நீ நீடுவாழ்க" என அவனை வெறுத்துரைத்து, அந்நகரைக் கடந்து சென்றனர். இருங்கோவேளும், இனி என்ன விளையுமோ என நடுக்கமுற் றுக் கவலை கொண்டிருந்தனன்.

அரையத்தினின்றும் புறப்பட்ட கபிலர், பெரிதும் கலக் கமெய்திய தன் மனதை நோக்கி, "என் ஏழை நெஞ்சே! தாம் தாம் முன் செய்த வினை தாமே நுகர்வதன்றி, வேறு எவர் நுகருவர்? 'வேண்டினும் வேண்டாவிடினும் உறற்பால தீண்டாவிடுதலரிது.' ஆதலால்,

"அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோன்
எழுதாப்படி வருமோ சலியாதிரு." எனத்

தேற்றிக்கொண்டு, மகளிரும் பின்வரக் காவதம் பல கடந்த பின்னர், முத்தமிழின் துறைபோகிய உத்தமர் இயற்றிய

நூற்பொருள் போல ஆழ்ந்தகன்று; சான்றோர் உள்ளம் என்னத் தண்ணளியோடு, சாந்த மருவித் தூய்மை பெற்று, அன்னவராது நலம்படர் ஒழுக்கம்போல, இடையறாது நிலம்படர் ஒழுக்கம் வாய்ந்த பெண்ணையாற்றிடைக் குறையில் வந்து தங்கினர். அங்கிருந்து இளைப்பாறி திருக்கோவலூரை அடைந்து, பார்ப்பனச் சேரியிற் போய்த் தம் மனத்திற்கு இனியாராய ஒரு அந்தணரைத் தலைப்பட்டு, அவரோடு அளவளாவிய பிறகு, புலவர், அம்மறையவரை நோக்கி, "ஒன்றுபட்ட கொள்கையின் இருவினையோர்ந்து, மூன்று பொழுதினும் நான்மறை யோதி, ஐவகை வேள்வி வேட்டு, ஆறங்கம் பயின்று ஏழுலகினும் புகழ் பரப்பிய அந்தணீர்! இங்கு நிற்கும் இவ்விருவரும் பாரியின் அரும்பெறன் மக்கள். பாரி, உயிர் போலும் எனக்கினிய நண்பன், ஆதலால், இவர்கள் யான் பெறாது பெற்ற மகளிராவார். இவர்க்குத் தக்க மணவாளர் இதுகாறும் கிடைத்திலர்; மணவாளர் கிடைத்து மணம் முடியுமளவும் இவரை உங்கள் காப்பில் வைத்துச் செல்கின்றேன்; இன்னோரைக் காத்தல் நும் கடனாகும்" எனக் கூறிப் பார்ப்பார் பக்கலில் அவரை விடுத்துப், பாரியின் பிரிவாற்றாது வடக்கிருப்பாராயினர்.

இவர் சென்றபின்னர், அம்மக்கள் இருவரும் சிறையிழந்த பறவைபோலப் பார்ப்பார் பாதுகாப்பில் இருந்துவந்தனர். இவ்வாறு சில நாட்செல்ல, பரிசில் பெற்று சேரனாட்டினின்றும் திரும்பிய ஔவையார், மூவேந்தரால் பாரிக்கு நிகழ்ந்த கொடுமைக்கு மனம் பொறாது திருக்கோவலூரை நோக்கி வரும் வழியில், பெருமழையால் நனைந்து, பாரி மக்களிருந்த மனையை யடைந்து, அவரைக் கண்டு, அவர்க்கு நேர்ந்த பெருந்துயர்க்கு உள்ளம் நைந்து, அன்றிரவு அவர்க

ளோடு தங்கினர். அப்பொழுது அம்மகளிர், ஆடைகொண்டு ஔவை மேனியின் ஒற்றி ஈரம் போக்கித், தீமூட்டிக் குளிர் நீக்கி, அவர் தகைமைக்குத் தக்கவாறு கொடுத்தற்குத் தம் பாற் பொருளின்மைக்கு மனங்கவன்று, தம்மிடத்திருந்த நீலச்சிற்றுடை ஒன்றைப் பணிவோடு நல்கினர்.

அதனையேற்று, மிக்க மகிழ்ச்சியெய்திய மூதாட்டியார், "மக்காள்! 'கொடையும் பிறவிக்குணம்' என்பர். வள்ளியோன் பெற்ற மெல்லியராகிய நீங்கள், நும் மரபிற்கு ஏற்ற வண்ணமே செய்தீர்கள்! வாழையே யன்றி அதன் கீழ் நின்ற **கன்றுங் கனியுதவும்** என்பதை இன்று உங்கள்பாற் கண்டேன். நீங்கள் அன்புடன் ஈந்திட்ட இச்சிற்றுடைக்கு ஈடாக எதனைச் சொல்லவல்லேன்? கேட்பீர்:—

முன்னொரு நாள், நுந்தை பாரிபாற் பரிசில் பெறச் சென்றிருந்தேன். என்னோடு அளவளாவியிருத்தலை இன்பமாகக் கருதிய அவன், பரிசில் கொடாது நீட்டித்தனன். இவ்வாறு நாட்பல செல்ல, ஒருநாள், பரிசில் ஈந்து என்னை விடுக்க வேண்டினேன். அதனை மறுத்தற்கு இயலாத அவனும் பொற்கலன் பல நல்கி என்னைப் போகவிடுத்துச் சிலரையேவி, யான் கொண்டு சென்ற அத்தனையும் பறித்துவரச் செய்தனன். யான் மீண்டும் தன்பால் வருதல் வேண்டி அவன்செய்த சூழ்ச்சியை அறியாது, யான், அவனிடைத் திரும்பச்சென்று நேர்ந்ததை உரைத்தேன். என்னைக் கண்டபோது, என் வருகையை வெறுத்தவன் போல முகத்தாற் காட்டி அகத்து வகையோடு நெடுநாள் அளவளாவியிருந்து, முன்னையினும் பன்மடங்கு பரிசில் நல்கிப் பின்னர்ப் போக விடுத்தான்."

"பின்னொரு நாள் பழையனூரிற் காரிபாற் பரிசில் பெற்று, வேற்றூர் போக விடைபெற வேண்டி அவ

னிடைச் சென்றேன். கொல்லையில் களையெடுக்கும் இடத்து நின்ற அவன், என் உள்ளக்குறிப்பைச் சொல்லா துணர்ந்து, என்னை விடுக்க மனமின்றி, 'இக்களையைக் களைந்து பின்னர்ச் செல்க' எனக் களைக்கோல் ஒன்றினை என் கையிற் கொடுத்தான். அங்குக் களை மலிந்திருந்தமையால், உடனே விடைபெறக் கூடாமல், இன்னும் பல நாள் தங்கியிருந்து, பிறகு விடைபெற்று மீண்டேன்."

" அதன் பின்னர், சேரமான் அரண்மனையில் நடைபெற்ற ஒரு விருந்தில் பலருடன் உண்டற்கு யானும் இருந்தேன். அப்போது, அங்குவந்த பிறனொருவனுக்கு இடம் ஒழிக்க வேண்டி, அச்சேரன், தன் அன்பிற்குரிய பெருந்தமராவார் பிறரின்மையால், ' என்னை நோக்கி, ஔவையே ! வாராய்! என்று அழைத்தனன். அஃதறிந்த யானும், புதிதாய் வந்தோனுக்கு என்னிடத்தை நல்கிச், சேரனோடு பின்உண்டு மகிழ்ந்தேன்."

"இம்மூன்று செய்கையும், அன்படியாகப் பிறந்தன வெனினும், உங்கள் செய்கையை இவற்றுள் ஒன்றோடு ஒப்பிடுதல் அமையாது. ஆனால், நீங்கள் ஈந்த இந்த நீலச் சிற்றாடைக்கு இம்மூன்றும் ஒக்கும்." எனக் கூறி,

> 'பாரி பறித்த கலனும் பழையனூர்க்
> காரியன் றீந்த களைக்கோலுஞ்—சேரமான்
> வாரா யெனவுரைத்த வாய்மொழியு மிம்மூன்று
> நீலச்சிற் றாடைக்கு நேர்.' என்று பாடினார்.

அதைக்கேட்டு மகிழ்ச்சி பெய்திய அம்மங்கையர், "அம்மையே ! ஒன்றுக்கும் பற்றாத சிறியோமாகிய எம்மை ஒருபொருளாகக் கருதி வந்த உம் பெருந்தகைமை என்னே ? உமது தகுதிக்கேற்ப விருந்தளிக்கும் பேறு பெற்றிலாத யாங்கள்

என்செய வல்லோம்? எம்மிடத்தில் இஃதையன்றி வேறில்லை. எம்மைகயிற் கிடைத்த இந்த நொய்ய உணவை அன்னை தென்றிகழாது ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என முகமலர்ந்து முகமன்கூறி, உண்மை பேசி, இலைக் கறியைப் பரிகலத்திற் படைத்தனர்.

கைத்திடும் வேம்பெனினும், அன்புடன் அளிப்பது அமுதன்றோ ? அதனுல், அவ்வுணவை, வாயூர நாமணக்கப் பலகால் சுவைகண்டு, தண்ணமுதெனு எண்ணி, ஔவையார் உண்டு களித்து, 'இஃதென்ன இலைக்கறியா ! ஏன் பொய் யுரைக்கின்றீர் ? விளைவோடுண்ணும் நறுஞ் சுவைத்தாய், உண்ண உண்ணத் தெவிட்டாததாய், வேண்டுமளவும் நறுநெய் வார்த்துச் சமைத்த அமுதை இலைக்கறியெனப் படைத்திட்டீர். இத்தகைய இன்சுவை மிக்க அமுதை அட்டிட்ட உங்கள் கைக்கண் கடகஞ் செறிவதாக' என வாழ்த்துவார்.

''வெய்தாய் நறுவியதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறையிட்டுப்—பொய்யே
யடகென்று சொல்லி யமுதத்தை யிட்டார்
கடகஞ் செறியாதோ கை.''என்னும் பாடலைப் பாடி

இக்கொடி போல் வாரைச் சிறிதும் தாழ்க்காது நன்னிலையில் நிறுத்தவேண்டும் என மனங்கொண்டு, அவ்வூரில் ஆட்சிசெய்திருந்த தெய்வீகன் என்னும் அரசனை அடைந்து, ' அரசே ! என்சொல் மறுது பாரிமகளிரை நீ மணம் செய்யவேண்டும்' எனக் கூறுவாராயினர்.

இதனைக் கேட்ட தெய்வீகன், வணக்கத்தோடு, ''அன்னுய்! 'தாய் சொற்றுரந்தால் வாசகமில்லை' என்பதை அறிவேன்; நீர் உணராத தொன்றில்லை. பாரியோ என்ருல், தமிழ்நாட்டு வேந்தர் மூவர்க்கும் பகைவன்; அவர்க்குப்

பகைவன் மக்களாகிய இவரை மணம்புரியின், அன்னவர் என்னையும் பகைத்துத் தீங்கு புரிகுவர்; பலவும் சொல்லி என் பயன்? அம்மூவரும் வந்திருந்து மணஞ் செய்விப்பாராயின், நான் பாரிமகளிரை மணந்து கொள்வதிற் றடையில்லை'' என விடையளித்தனன்.

ஔவையார், 'நன்று, நின் எண்ணப்படியே செய்வேன்' எனக் கூறி, தம் வழிபடு கடவுளாகிய பிள்ளையாரை வணங்கிச், ''சேர சோழ பாண்டியர்களே! தெய்வீகனுக்குப் பாரி மகளிர், அங்கவை சங்கவையைத் திருக்கோவலூரில் இன்று பதினெட்டாம் நாள் மணம் செய்விக்கக் கருதியுள்ளோம். நீங்கள் பழம் பகைமை பாராட்டாது வந்திருந்து, திருமணம் முடிப்பிக்கக் கடவீர்'' என்பார்.

''சேரலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவ
லூராளவுந் தான்வருக வுட்காதே—பாரிமகள்
அங்கவையைக் கொள்ள வரசன் மணமியைந்தான்
சங்கியர் தேவருக தான்.
புகார்மன்னன் பொன்னித் திருநாடன் சோழன்
தகாதென்று தானங் கிருந்து—நகாதே
கடுக வருக கடிக்கோவ லூர்க்கு
விடியல் பதினெட்டா நாள்.
வையைத் துறைவன் மதுரா புரித்தென்னன்
செய்யத் தகாதென்று தேம்பாதே—தையற்கு
வேண்டுவன கொண்டு விடியல்பதி னெட்டாநாள்
ஈண்டு வருக விரைந்து''

எனச் சேர சோழ பாண்டியர் மூவர்க்கும் மண வோலை போக்கினர்.

திருமுகம் கண்ட மூவேந்தரும், மறுமாற்றம் உரையாராய்த், தத்தம் படைகள் சூழத் திருக்கோவலூரில் தெய்

வீகன் அரமனையில் வந்து சேர்ந்தனர். அவர்களைக் கண்ட ஒளவையார், முகமனுரைத்து, அளவளாவி, அவர்களுக் கென்று அமைத்திருந்த அரியணைகளில் அமரச் செய்தனர். அவ்வாறு அமர்ந்த மூவரும், 'தமிழ்த்தாயே! இம்மணப் பந்தரைத் தாங்கி நிற்கும் பனந்துண்டுகள், தழைத்துக் காய்த்துப் பழந்தருமேல், பாரிமகளை யாங்கள் தெய்வீக னுக்கு மணஞ் செய்விப்பதில் தடையில்லை' என்றனர்.

அது கேட்ட ஒளவையார், பனந்துண்டை நோக்கி, 'ஏ, பனந்துண்டமே! வெண் கொற்றக் குடையை யுடைய சேர சோழ பாண்டியர்கள், அங்கவை சங்கவைக்கு அறுகிட வேண்டி இம்மணப் பந்தரில் வந்து நிற்கின்றனர். அவர்கள் மகிழும் வண்ணம் வெண் குருத்தும், பின் பச்சோலையும் ஈன்று, குரும்பை விட்டு, நுங்கு முற்றி அடியிற்கறுத்து, நுனிசிவந்து பங்குக்கு மூன்று பழம் தரவேண்டும் என்பார்.

"திங்கட் குடையுடைச் சேரனுஞ் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றார்மணப் பந்தரிலே
சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சலசலத்துக்
கொங்கிற் குறத்தி குவிதனம் போலக் குரும்பைவிட்டு
நுங்குக்கண் முற்றி யடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே"

எனப் பாடினார்.

பாட்டிற் கண்ட பரிசே, பனந்துண்டுகள், வெண்குருத் தீன்று, குரும்பை விட்டு முற்றிப், பழுத்து நிற்கக் கண்ட தமிழ் மன்னர் மூவரும், வியப்பும் அச்சமும் மிக்குடைய ராய்ப் 'பாரி மகளிரைத் தெய்வீகன் மணஞ்செய்யலாம்' எனத் தம் ஒருப்பாடு கூறித் தாமும் ஒளவையாருடனிருந்து கடிமணத்தைச் சிறப்புடன் நடத்தினார்கள்.

அப்பொழுது, ஔவையார், அங்கு மணத்திற்கு வந்திருந்தார்க்குப் பொன்னளிக்கக் கருதி, தம் கடவுட்டன்மை விளங்க, வருணனை நோக்கிக், 'கடல் சூழ்ந்த உலகை நீரா லளிக்கும் மழைக்கரசே! இம்மலையன் திருமணத்திற்காகக் கோவலூருக்கு வந்தார் எவரும் பெற்று மகிழப் பொன்மாரி பெய்க' என்பார்,

"கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன் கோவற்—பெருமணத்து
நன்மாரி தாழ்க்கொண்ட நன்னீ ரதுதவிர்த்துப்
பொன்மாரி யாகப் பொழி."

எனப் பாடுமுன், விண் நீர் பொழிதலொழிந்து பொன் மாரி பெய்தது. யாரும் அவா அடங்கப் பொன் பெற்று மகிழ்ந்தனர். பின்னர், அன்னவர் யார்க்கும் ஆடையும், உணவுக்கு அரிசியும் அளிக்க வேண்டிப், பொன்மாரி பெய்த இவ்வூரில், பருத்தி ஆடையாய்க் காய்க்க; வயலில் அரிசியே விளைக என மனங்கொண்டு,

"பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாம்
அன்னுன் வயலரிசி யாகுமூர்—எந்நாளும்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்
ஓங்குந் திருக்கோவ லூர்."

என்று பாடியருளினார்.

உடனே வயல்களெல்லாம், அரிசியாய் விளைந்தன; பருத்திச் செடிகள், பட்டாடையைக் காய்த்து நின்றன. பெருமணத்திற்கு வந்திருந்தார் எவரும், ஆடையும், அரிசியும் வேண்டுமளவும் பெற்றுக் களித்தனர். அதன் பிறகு, தமிழ்மூதியோள், விருந்தினர் யார்க்கும் பரிந்தளித்தற்

பொருட்டுப் பெண்ணையாறு நெய்பால் தலைப்பெய்து வருதல் காரணமாக,

“ முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
தத்திவரு நெய்பா றலைப்பெய்து—குத்திச்
செருமலைதெய் வீகன் திருக்கோவ லூர்க்கு
வருமளவிற் கொண்டோடி வா ” எனப் பாடினார்.

தமிழறிவிற் சிறந்த அவ்யாறும், தண்ணீரொழிந்து, நெய்யும் பாலுமாகப் பிரிந்து, திருக்கோவலூரளவும் ஓடிவந்தது. கண்டோர் யாவரும் உண்டு மகிழ்ந்தனர்.

இவ்வாறு கடிமணத்திற்கு வந்திருந்தார் யாவரும் களிப்புற்றுத் தத்தம் நகர்செல்ல விடை கேட்டபோது, ஒளவையார் அவர்கள்பால் அருள் சுரந்து,

“ பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனுண் டுறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது

செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென."

அறவுரை கூறி வழியனுப்பிய பின், தெய்வீகனை அருகழை த்து, 'தார்வேந்தே! உலகம் நிலைபெறுதற்கு இன்றியமை யாதன நெல்லும் நீரும் எனினும், நெல்லும் உயிரன்று நீரும் உயிரன்று; மன்னனே உயிராவான். ஆதலால், மலர்தலை யுலகிற்கு உயிரெனச் சிறந்த நீ, நின் குடைக்கீழ் வாழ்நரை, நின்னால், நின் பரிசனத்தால், பகைவரால், கள்வரால், தீய விலங்கால் துன்புறாமல் காக்க. இல்வாழ்வோன், தென்புலத் தார் முதல் ஐம்புலத்தாறு ஓம்பல் கடனாக உடையனாதலால், அன்னவன்பால் ஆறிலொன்று இறைகொள்க. நீரானிறைந்த ஊருணியும், ஊர்நடு நின்ற பழுமரமும் போல், முயன்றீட் டிய பொருளான், எவர்க்கும் பயன்பட இருந்திடுக. வில்லே ருழவர் பகையினும் சொல்லே ருழவர் பகையை அஞ்சுக. கடு மொழியும் கையிகந்த தண்டமும் ஒருவிக், காட்சிக் கெளிய னாய் நானிலம் மீக்கூற நீடு வாழ்க' என வாழ்த்தி, மகளிரை நோக்கி, 'மாசில் வேள் குலத்து வந்த மணிகாள்! காதல் மனையாளும் காதலனும் ஒருங்கிணைந்து ஈர்ப்பிற் செல்லுமல் லது, இல்வாழ்க்கை என்னும் வான் சகடம், ஒருவராற் செல் லாது. மகளிர்க்குக் கொண்டானிற் சிறந்த கேளிரும் தெய் வமும் இல்லை. அவன் கருத்திற் கிசைந்து நடப்பதே உங் கட்கு அடுத்ததாகும். சுருங்கச் சொல்லின், கணவன் சொற்கு மாறுரையாமல் அடங்கி நடப்பதே பெண்கட்குரிய அறமென் பர். ஆகவே, நீவிரும், நும் காதலன் கற்பித்தவற்றை மற வாமல் கடைப்பிடித் தொழுகுமின்' என்றுரைத்திட்டு, அம் மகளிரைத் தெய்வீகன் கையில் நல்கி, 'அரசே! இவர்பால் இன்றுபோல் என்றும் அன்பிற் குறைபடாது வாழ்க' என

ஓம்படை கூறி விடுத்துச் சென்றனர். அவனும், காகத்தின் இருகண்ணிற் கலந்து நின்ற ஒரு மணிபோல, இருவர் ஆகத்தும் ஓருயிராய் அன்புபாராட்டி இருந்தனன்.

அம்மகளிரும், தம் தெய்வமாகிய கொழுநனை யன்றிப் பிறநினையாராய்த் திங்கள் மும்மாரி பெய்து நாடுசெழித்து நலம் தழைவதற்கு ஏதுவாகிய கற்பின் வழாமல் தம்மைக் காத்துக், கண்ணினைக் காக்கும் இமைபோலத் தம் கணவனைப் பேணித், தம்மை வந்திரந்தான் ஒரு * பாண்மகனுக்குப் பொன்னை உணவாக நல்கிப் புகழ்பரப்பிப், பண்ணும் இன்னிசையுமென ஒன்றுபட்ட அன்பினராய் அவனோடு இன்புற்று வாழ்ந்திருந்தனர்.

*"மாரியோன் றின்றி வறந்திருந்த காலத்தும்
பாரி மடமகள் பாண்மகற்கு—நீருலையுட்
பொன்றந்து கொண்டு புகாவாக நல்கினா
ளொன்றுரு முன்றிலோ வில் "

என்னும் பழமொழிச் செய்யுளானும், மாரி என்பதொன் றின்றி உலகம் வற்றியிருந்த காலத்தும் பாரி மடமகளிர் இரந்து வந்தாரொரு பாண்மகற்குப் பொன்னை சோறாக உதவினளாதலாற் சென்றிரந்தால் ஒரு பயன் படாத மனை யில்லை என்றவாறு" என்னும் அதன் உரையானும் உணர்க.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயவெ லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

முற்றிற்று.

## அரசவாழ்த்து

இமிழ்திரை முழங்கு நெடுநில வரைப்பில்
மன்பதை முழுவதும் இன்புறல் வேண்டி
நீர்நிழ லில்லா நெடுஞ்சுர நின்ற
தனிமரம் போலத் தண்ணளி புரிந்து
மாட்சி மேம்படும் ஆட்சி நடத்துவ
தொன்றே யுளத்தி னன்றுற வமைத்துக்
குருமணி யிமைக்கும் ஒருமுடி சூடிப்
பொன்னிகர் மேரித் தன்னிக ரணையொடும்
அரியணை மேவி யரசுவீற் றிருக்கும்
நந்தா வென்றி ஐந்தாம் ஜார்ஜுமன்
இன்னல் விளைக்குந் துன்னலர் வெருவிப்
புலந்தொறும் புக்கொளித் தேங்கி யலமர
வென்றியும் புகழுந் துன்றி நிலவுற
ஏற்றுரி முரச நாற்றிசை முழங்க
சிங்கக் கொடியே எங்கணு நுடங்க
இரவியு மதியமு மியங்கு நாளளவுந்
தனிக்கோல் யாண்டுந் தடையின்றி நடப்பத்
தாழ்விலா வொருவன தருளால்
வாழி வாழியர் வாழுக மாதோ.

துரைத்தனத்தாரும் அங்கீகரித்தது

# வியாஸ விதானம்

இது

ஆ. ஸி. கஸ்தூரிரங்கய்யர், பி.ஏ.,எல்.டி.,

அவர்கள் இயற்றியது.

பசு, விகடப் பறவை, புலி, தென்னை மரம், கடிகாரங்கள், காவிரி, விடுமுறை யாத்திரை, வீடு நெருப்புப்பற்றி எரிதல், வித்தியாரணிய சுவாமிகள், மைகேல் பாரடே, தர்மாபிலேக் காவல், சிவாஜியும் அப்ஜூல் கானும், ஆறுகள், தபால் ஒழுங்கு, கம்பியில்லாத் தந்தி, பள்ளிக்கூடப் பூர்ண ஏற்பாடு, பழகப் பழகப் பாலும் புளிக்கும், குரங்கு கையில் பூமாலை அகப்பட்டாற்போல, ஜீவ காருண்யம், பொய்யுரைத்தல், மிதச் செலவு, போட்டி, மனோராஜ்யம், கம்பர், வொர்ட்ஸ்வொர்த், சீதோஷ்ண ஸ்திதியும் மனோநிலையும்

இவை முதலாகிய விஷயங்களைப்பற்றிய அருமையான வியாசங்கள் கொண்டது. சித்திரப்படம் அடங்கியுள்ளது. மாணவர்களுக்கேற்ற புத்தகமென துரைத்தனத்தார் அங்கீகரித்தது.

— விலை அணா 12 —

துரைத்தனத்தாரும் அங்கீகரித்தது

# நால்வர் சரித்திரம்

சீர்திருத்திய இரண்டாம் பதிப்பு

(மா. துரைசாமி முதலியார் இயற்றியது.)

எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாம் சிவ பரம்பொருளின் திருவருள் பெற்று விளங்கிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி, மாணிக்கவாசகர் முதலிய சைவ சமயா சாரியர்கள் நால்வர்களின் சரிதங்கள் இனிய எளிய செந்தமிழ் நடையில் வசன ரூபமாக எழுதப்பட்டுள்ளன. இடையிடையே அவர்கள் அவ்வக் காலங்களில் பாடியுள்ள தேவாரத் திருப்பதிகங்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. ஒப்புயர் வற்ற அப்பெரியார்கள் செய்துள்ள அற்புதச் செயல்களின் தன்மையும், இறைவன் அவர்கள் மாட்டு அருள் சுரந்த மாண்பும் இந்நூலைப் பெற்று வாசிப்போர்க்கு இனிது விளங்கும். இதில் அழகிய நால்வர் திருவுருவப் படமும் வைக்கப் பட்டுள்ளது. சுத்தப் பதிப்பு. நல்ல காகிதம். உயர்ந்த ராப்பர் பைண்ட், விலை அணு 10 ; அழகிய அட்டை பைண்ட் விலை அணு 12

---

மானேஜர், விவேக போதினி, மயிலாப்பூர், சென்னை.